# மதமும்
# மன அமைதியும்



தமிழ்வாணன்

மணிமேகலைப் பிரசுரம்
தியாகராய நகரம்,
சென்னை-600 017.

# மதமும் மன அமைதியும்

## இந்து மதம் என்பதாக ஒரு மதமே கிடையாது!

வேதாந்தம் என்பது வேதத்தின் முடிவான பொருள். அத்துவிதம் என்பது இரண்டு அற்ற ஒரே பொருள். அதை 'இரண்டு அல்லாத' என்று பொருள் கொள்ளக் கூடாது, 'இரண்டு இல்லாத' என்றே பொருள் கொள்ள வேண்டும் என்பது போன்ற தகராறுகளெல்லாம் நிறைய உண்டு. 'அல்லாத' வுக்கும் 'இல்லாத'வுக்கும் என்ன அவ்வளவு வேறு பாடு? இரண்டுக்கும் இடையே மலேக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடு இருக்கிறது என்கிருர்கள் சமய இலக்கணப் பண்டிதர்கள். அத்துவிதம் என்னும் சொல்லுக்கு அவர்கள் கற்பிக்கும் பலவேறு பொருள்களின் அடிப்படையில் தான், நம் நாட்டின் பலவேறு பழமையான சமயங்கள் தோன்றி இருக்கின்றன.

இந்தச் சமயங்கள் எல்லாமே பொதுவாக இந்து மதம் என்ற பெயரால் அழைக்கப்பட்டு வருகின்றன. அறியாதவர் கள் இவற்றை இந்து மதத்தின் உட்பிரிவுகள் என்று சொல்லு வார்கள்.

இது தவறு.

காரணம்.

இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனிப்பட்ட சமயமே அன்றி, எந்த ஒரு சமயத்தின் உட்பிரிவும் அல்ல. இரண்டாவதாக, உண்மையில் இந்து மதம் என்ற ஒரு மதமே கிடையாது.

நம் பாரத நாட்டில் உள்ள பெரும்பாலான சமயங்களுக்கு மூலநூலாக விளங்குவது வேதமே. வேதத்தில் இறைவனுக்கு அத்துவிதம் என்று ஒரு பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பெயரை ஆதாரமாக வைத்துத்தான் கேவல அத்துவிதம், சுத்த அத்துவிதம், விசிஷ்ட அத்துவிதம், சிவ அத்துவிதம் எனப் பலவேறு மதங்கள் வழங்கி வருகின்றன. ஒவ்வொரு மதத்தைச் சேர்ந்தவர்களும், தாங்கள் தாம் அத்துவிதத்தின் உண்மையான பொருளை உணர்ந்த அத்துவிதிகள் என்று சொல்லிக் கொள்வார்கள். ஆனால் இன்றைக்கு நம் இந்தியாவிலும் சரியே, வெளி நாடுகளிலும் சரியே, அத்துவிதம் என்னும் சொல்லுக்கு ஆதிசங்கரருடைய அத்துவிதமே என்றே பொதுவாகப் பொருள் கொள்ளப்படுகிறது!

## அந்தக் காலத்தில் சொந்தக் கருத்துக்கு மதிப்பு இல்லை!

வேதாந்தம் என்ற சொல்லும் நடைமுறையில் இதே போன்றுதான் பொருள் கொள்ளப்பட்டு வருகிறது.

வேதத்தின் முடிவாகக் கருதப்படுகிற உபநிடதங்களுக்கு வேதாந்தம் என்று பெயர்.

உபநிடதங்களின் சாரமாய் உள்ளவை பிரும்ம சூத்திரங்கள்.

உபநிடதங்கள், பிரும்ம சூத்திரங்கள் ஆகிய இந்த இரண்டின் சாரமாய் உள்ளது பகவத்கீதை.

பௌத்தம், சமணம் போன்ற இரண்டொரு சமயங்களைத்தவிர, வேதக் கருத்துக்களை ஆதாரமாகக் கொள்ளாத

எந்த ஒரு சமயத்தையும் பண்டைக் காலத்துப் பாரத மக்கள் அவ்வளவாக ஏற்றுக் கொள்வதில்லை.

இதனால்தான்,

ஆதி சங்கரர், இராமானுஜர், மத்துவர் போன்ற மாபெரும் சமய ஆசிரியர்கள் கூடத் தாங்கள் உலகுக்கு எடுத்துச் சொல்லிய புதுமையான கருத்துக்களையெல்லாம் 'இவை புதுமையான கருத்துக்கள் அல்ல, பழமையான உபநிடதங்களிலேயே இவை சொல்லப்பட்டிருக்கின்றன' என்று வலியுறுத்திக் கூறினார்கள்.

அப்படிக்கூறியது மட்டும் அல்ல.முதன்மையான உபநிடதங்களுக்கும் பிரும்ம சூத்திரங்களுக்கும் பகவத் கீதைக்கும் தத்தம் மதங்களைத் தழுவிய வகையில் அவர்கள் விரிவுரைகளும் எழுதினார்கள்.

ஏனென்றால்,

இது என் பேரறிவில் பிறந்த அருமையான கருத்து என்று ஒரு சமய ஆசிரியர் சொல்லுவாரானால், அவர் எவ்வளவு தான் பெரிய மகாத்மாவாக இருந்தாலும்,அவர் சொல்லும் கருத்து எவ்வளவு சிறந்ததாய் இருந்தாலும்,அந்தக் காலத்து இந்திய மக்கள் அதை ஏற்றுக் கொள்வதில்லை!

எனவே,

சங்கரராய் இருக்கட்டும், இராமானுஜராய் இருக்கட்டும், மத்துவராய் இருக்கட்டும், ஒவ்வொருவரும் தங்களுடைய மதமே வேதாந்தத்தின் அதாவது வேத முடிவின் சாரம் என்று கூறி வந்தார்கள். ஒரு சில நூற்றாண்டுகளுக்கு முன்பு நம் தமிழ் நாட்டில் 'வேதாந்த தேசிகர்' என்னும் ஒரு மாபெரும் புகழ் படைத்த வைணவப் பெரியாரே வாழ்ந்து வந்திருக்கிறார்.எனினும் இன்றைக்கு நம் நாட்டிலும் சரியே, மேல் நாடுகளிலும் சரியே, வேதாந்தம் என்னும் சொல்லானது ஆதி சங்கரருடைய அத்துவித மதத்தைக் குறிப்பதாகவே பொதுவாகப் பொருள் கொள்ளப்படுகிறது!

## இந்திய மதங்களில் மிகவும் செல்வாக்கு உடையது இந்து மதமே!

இன்று இந்தியாவில் எத்தனையோ மதங்கள் இருக்கின்றன. இருந்தாலும் இந்து மதம் என்ற பெயரால் வெளி நாடுகளில் பெரிதும் வழங்கப்படுவது ஆதிசங்கரரின் அத்துவிதமாகும். இதற்குக் காரணம், அந்த மதத்திற்காகச் சுவாமி விவேகானந்தர் ஆற்றியருளிய அரும் பணியே! அவரால் நிறுவப்பட்ட ஸ்ரீ இராமகிருஷ்ணமடங்கள் இன்று உலகு எங்கிலும் அந்தப் பணியைத் தொடர்ந்து புரிந்து வருகின்றன!

இதே போன்று இந்தியாவிலும், காஞ்சி, துவாரகை, பூரி, சிருங்கேரி போன்ற இடங்களில் ஆதிசங்கரராலேயே நிறுவப்பட்டு, இன்று வாழையடி வாழையாக வளர்ந்து கொண்டிருக்கும் சங்கர மடங்களும் அவரது அத்துவிதக் கொள்கையை நாடெங்கிலும் பரப்பி வருகின்றன.

இதைத் தவிர,

பத்ரிநாத்திலிருந்து பாண்டிச்சேரி வரையில் உலாவித் திரியும் நூறுயிரக் கணக்கான சன்னியாசிகளில் பெரும் பாலோர் சங்கர மதத்தைச் சேர்ந்தவர்களே!

திருவண்ணாமலையில் வாழ்ந்திருந்த இரமண மகரிஷியும், ரிஷிகேசத்தில் வாழ்ந்திருந்த சிவானந்த அடிகளும் ஆதி சங்கரரின் அத்துவித நெறியில் நின்றவர்களே!

இப்படி,

பலவேறு வகையான காரணங்களால் பாரதத்திலும் அயல் நாடுகளிலும் சங்கரமதமானது மிகப்பெருஞ் செல்வாக் கோடு விளங்கி வருகிறது. இவ்வளவு சிறப்பான ஒரு மதத் தைப் பற்றி நாம் தெரிந்து கொள்ளாமல் இருக்கலாமா?

சங்கரரது உபநிடத விரிவுரைகளையோ, அல்லது அவர் தாமே இயற்றிய விவேகசூடாமணி போன்ற முதல் நூல் களையோ நாம் படித்துப் பார்த்தால் மிக மிக நுணுக்கமான

தர்க்க நூல் அறிவும் ஆழமும் தெளிவும் வாய்ந்த ஓர் இணையற்ற சிந்தனை சக்தியும் அவற்றில் வெளிப்பட்டு விளங்குவதை நாம் காணலாம். வடமொழிக் கல்வியிலும் தத்துவக் கல்வியிலும் பல்லாண்டு காலம் பயிற்சி பெற்ற பண்டிதர்களால் மட்டுமே அவற்றை ஓரளவு புரிந்து கொள்ள முடியும்.

ஆனால்,

சங்கரரின் கருத்து ஆழத்தை முழுமையாகப் புரிந்து கொள்வதற்கு வெறும் கல்வி அறிவு மட்டும் போதாது. அதோடு ஓரளவு ஞானப் பயிற்சியும் இருக்க வேண்டும். அல்லது அத்தகைய ஞானப்பயிற்சி உடையவர்களை நாம் அடுத்து இருந்து பாடம் கேட்கவேண்டும். இல்லாவிட்டால், சங்கர அத்துவிதத்தின் உண்மையான உட்பொருள்கள், நமக்கு அவ்வளவு தெளிவாக விளங்கமாட்டா!

பொதுவாக,

எல்லாச் சமய நூல்களுக்குமே இந்த விதி பொருந்தும். என்றாலும், சங்கரரின் நூல்களுக்கு அது இன்னும் மிகுதியாகப் பொருந்தும்.

காரணம்,

இன்று உலக வாழ்வில் எதை எதை உண்மை என்று நாம் நம்பிக் கொண்டிருக்கிறோமோ, அதையெல்லாம் உண்மை அல்ல என்று ஒரேயடியாக மறுத்துரைக்கிறது சங்கர அத்துவிதம்.

## நம் அறிவை மறைக்கும் திரை

எடுத்துக்காட்டாக,

உலகில் உள்ள பெரும்பாலான மதங்கள், இந்த உலகத்தை ஒரு மெய்ப் பொருளாகவே ஒப்புக் கொள்கின்றன.

இதற்கு மாறாக,

'இந்த உலகமும், இதில் உள்ள பொருள்கள் அனைத்தும் வெறும் பொய்த் தோற்றங்களே' என்று வலியுறுத்துகிறார் சங்கரர்.

மற்ற மதங்களெல்லாம் கடவுளை வணங்க வேண்டியதே உயிர்களின் கடமை என்கின்றன. சங்கரரும் சில இடங்களில் இதை ஒப்புக் கொள்வதைப் போல் தோன்றினும், 'கடவுளும் உயிர்களும் வெவ்வேறு அல்ல, இரண்டும் ஒன்றே என்பது அவரது இறுதி முடிவு.

இவையெல்லாம் நாம் பொதுவாக நம்பிக் கொண்டிருக்கிற கொள்கைகளுக்கு முரண் ஆனவை அல்லவா? ஆதிசங்கரர் இந்தக் கூற்றைத் தம் ஒப்புயர்வு அற்ற தர்க்க வாதங்களால் மெய்ப்பித்திருக்கிறார்.

எனினும்,

அந்த வாதங்களின் உண்மையை நாம் அனுபவத்தில் உணர்ந்து கொள்ள வேண்டுமானால், நம்முடைய புலன்களுக்கும் மனத்திற்கும் நாம் சிறிது பயிற்சி கொடுக்க வேண்டும். அது என்ன பயிற்சி, அதை எப்படி மேற்கொள்வது என்பதையும்கூடச் சங்கரர் விரிவாக விளக்கியிருக்கிறார்!

எனவே,

சங்கரருடைய பாதையை நாம் சரிவரப் புரிந்துகொள்ள வேண்டுமானால் அதைப் பற்றிப் படித்தால் மட்டும் போதாது. பயிற்சியும் செய்ய வேண்டும். அப்படி அவருடைய பாதையைப் புரிந்து கொண்டு நமக்கு ஆக வேண்டியது என்ன என்கிறீர்களா? இந்த உலக வாழ்வில் காணப்படுகிற துன்பங்கள் அனைத்திலிருந்தும் விடுபடுவதும், இந்த உலகியல் இன்பங்கள் அனைத்துக்கும் மேலான ஒரு பெரிய இன்பத்தை நிலையாக எய்துவதுமே—அடையத் தகுந்த பயன்கள் என்று'சொல்லப்படுகிறது. இதைவிட மேலான பயன்கள் வேறு ஏதாவது இருக்கின்றனவா?

துன்ப நீக்கம்—அதே சமயத்தில் இன்பப் பேறு—இதுவே உலகில் உள்ள எல்லா உயிர்களாலும்

விரும்பப்படுகிற ஒரு நிலே. நெளியும் புழுவிலிருந்து நிமிர்ந்து நடக்கும் மனிதன் வரையில் அனைத்து உயிர் களின் செயல்களும் இந்தக் குறிக்கோளே நோக்கியவை யாகவே இருக்கின்றன. அதாவது, உயிர்கள் எந்தக் காரியத் தைச் செய்தாலும், ஒன்று, தங்கள் துன்பத்தைப் போக்கிக் கொள்வதற்காக அல்லது ஓர் இன்பத்தை அடைவதற்காக அவை அக் காரியத்தைச் செய்கின்றன. அவை ஒரு காரியமும் செய்யாமல் சும்மா இருந்தாலும், உறங்கிஞலும்கூட, அதுவும் துன்ப நீக்கத்துக்காகத்தான்! அல்லது இன்பப் பேற்றுக்காகத்தான்! ஆஞல் உயிர்கள் இப்படி இடையருது முயற்சி செய்வதன் விளேவாக அவற்றின் துன்பங்கள் என்றைக்காவது அறவே ஒழிகின்றனவா? அல்லது ஒரு நிலே யான இன்பத்தைத்தான் அவை அடைகின்றனவா?

இல்லே!

வாழ்வில் நமக்கு ஒரு துன்பம் போஞல் இன்னொரு துன்பம் வருகிறது. ஒரு பிரச்னே தீர்ந்தால், இன்னொரு பிரச்னே முளேக்கிறது!

இது போகட்டும்.

நாம் ஆசையோடு விரும்பிப் பாடுபட்டு அடைகின்ற எந்த இன்பமாவது நமக்குக் கடைசி வரையில் நிலேத்து நிற்கிறதா?

இல்லே.

ஒன்று நமது இன்பத்துக்கு உரிய பொருளே போய்விடு கிறது. அல்லது, பொருள் போகாமல் இருக்குமாஞல், அதன் மீது நமக்கு இருந்த பிரியம் குறைந்துவிடுகிறது. பிரியம் குறையக் குறைய, அந்தப் பொருள் மீது நமக்கு அலுப்புத் தட்டுகிறது. அலுப்பு என்பது துன்பத்தின் துவக்கமே!

அதாவது,

முதலில் எந்தப் பொருள் நமது இன்பத்துக்குக் காரண மாய் இருந்ததோ, அதுவே பின்ஞல் நம் துன்பத்துக்குக் காரணமாக மாறுகிறது!

உடனே இன்பத்துக்காக நாம் வேறு ஒரு பொருளை நாடிச் செல்லத் தலைப்படுகிறோம். ஆனால் அந்தப் புதிய பொருளும் இப்படித்தானே சிறிது காலத்துக்குப் பிறகு நமக்குத் துன்பத்தைத் தரப்போகிறது என்பதை நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. அப்படி எண்ணிப் பார்க்க முடியாதபடி நம் அறிவில் ஏதாவது ஒரு திரை விழுந்து மறைத்துக் கொண்டிருக்கிறதா?

'ஆம்' என்கிறார் ஆதிசங்கரர். அந்தத் திரைக்கு அவர் அவித்தை என்று பெயர் கொடுக்கிறார்.

நம் அறிவில் தெளிவு உண்டாகாதபடி தடுத்து, நல்லதைக் கெட்டது என்றும், கெட்டதை நல்லது என்றும், நாம் நம்பி மயங்கும்படி நம் அறிவைக் குழப்பி நம்மை எல்லா வகையான துன்பங்களுக்கும் ஆளாக்கி வைப்பது இந்த அவித்தையே ஆகும்.

ஆகவே,

நாம் எப்பாடு பட்டாவது நமது அவித்தையைப் போக்கிக்கொண்டு விடுவோமானால் அப்புறம் வாழ்வில் நமக்குத் துன்பமே ஏற்படாது. எல்லாம் இன்பமயமாகவே இருக்கும்!

மனிதன் மட்டும் அல்ல, உயிர்ப்பிராணிகள் அனைத்துமே இந்த அவித்தையில்தான் சிக்கி உழல்கின்றன. ஆனால் அவித்தையிலிருந்து விடுபடுவதற்கான வாய்ப்பு, உயிர்களுக்குள்ளேயே மனிதனுக்கு மட்டும்தான் இருக்கிறது. மற்றப் பிராணிகளுக்கு அந்த வாய்ப்புக் கிடையாது.

ஏன் இப்படி?

மற்றப் பிராணிகளுக்கு நாம் 'அவித்தையில் கிடந்து உழலுகிறோம்' என்னும் உண்மையை உணர்ந்துகொள்ளவே முடியாதே! அதை உணர்ந்துகொண்டால் அன்றி, அவித்தையை அவற்றால் ஒருநாளும் போக்கிக்கொள்ள முடியாதே!

முதலாவது,

அவித்தை என்றால் என்ன என்பதைப் புரிந்துகொள்ள வாவது அவற்றால் முடியுமா? அவற்றிற்குப் புரிய வைக்கத் தான் வேறு எவராலாவது முடியுமா?

மனிதன் ஒருவனுக்குத்தான் நாம் அதைப் புரியவைக்க முடியும். அவன் ஒருவனால்தான் அதைப் புரிந்துகொள்ளவும் முடியும். புரிந்துகொண்டபின் அதை அகற்றிக் கொள்வதற் கான பயிற்சிகளில் ஈடுபடுவதற்கும் அவனால் மட்டுமே முடியும்.

அதாவது,

உலகியல் வாழ்வில் உயிர்களை வந்து தாக்குகிற துன்பங் களில் இருந்து தப்பித்துக் கொள்வதற்கு மனிதன் ஒருவன் தான் தகுதியுடையவனாக விளங்குகிறான். மற்ற உயிர்கள் எதற்குமே அந்தத் தகுதி கிடையாது!

## நாம் துன்பங்களின் துணையைக் கொண்டே துன்பங்களிலிருந்து விடுபட வேண்டும்!

'மனிதனாய்ப் பிறந்தவன் மாபெரும் பேறு பெற்றவன்' என்னும் ஆசி உரையோடு விவேக சூடாமணி என்ற தம் அரிய நூலைத் தொடங்குகிறார் ஆதிசங்கரர்.

மனிதர்களில் மட்டும் எல்லாராலும் அவித்தையைப் புரிந்துகொள்ள முடியுமா? அப்படியே புரிந்துகொண்டா லும் அதைப் போக்கிக்கொள்ள முடியுமா? அவித்தையைப் புரிந்து கொள்வதற்கும், அதைப் போக்கிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபடுவதற்கும் சில தகுதிகள் உண்டாகியிருக்க வேண்டும். அத்தோடு, 'இந்த உலகியல் துன்பங்களிலிருந்து எப்படியும் விடுபட்டே தீருவது' என்னும் வேட்கையும் நம்மை வலுவாக ஊக்குவிக்க வேண்டும். அந்த ஊக்கம் உண்டாகாத வரையில், நாம் எத்தனை பிறவி எடுத்தாலும் நம்மால் கடைத்தேற முடியாது !

துன்பங்களிலிருந்து விடுபடவேண்டும் என்னும் வேட்கை நமக்கு எப்போது உண்டாகிறது? நாம் இன்பங்களை

நுகர்ந்துகொண்டிருக்கும் சமயத்தில் அத்தகைய எண்ணமே நமக்கு எழமாட்டாது. துன்பங்கள் வரவேண்டும், அந்தத் துன்பங்களும் எளிதில் தீர்க்கப்படாதவையாய் நம்மைத் திக்குமுக்காடச் செய்பவையாய் இருக்க வேண்டும். அப்போதுதான் இவற்றிலிருந்துஒரேயடியாய் விடுதலை பெறுவது எப்படி என்ற சிந்தனையில் நம் மனம் செல்லத் தொடங்கும்.

அதாவது,

துன்பங்களின் துணையைக் கொண்டே நாம் துன்பங்களிலிருந்து விடுதலை பெற வேண்டும்!

இது எப்படி?

இரவு முழுவதும் நாம் தீய கனவு கண்டுகொண்டே இருப்பதாய் வைத்துக் கொள்வோம். அது நமக்கு எவ்வளவு வேதனையாய் இருக்கும்? அந்த வேதனையிலிருந்து விடுபட வேண்டுமானால் நாம் விழித்துக் கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை. ஆனால் விழிப்போ வரமாட்டேன் என்கிறது!

இதற்கு என்ன செய்வது?

தீய கனவுகளுக்கு இடையே சில இன்பக் கனவுகளும் கண்டு கொண்டிருப்போமானால் நாம் எளிதில் விழிக்க மாட்டோம். ஆனால் ஒரு புலி நம்மைத் துரத்துவதாகக் கனவு காண்போமானால், அப்போதே நாம் அலறியடித்துக் கொண்டு விழித்துக் கொள்வோம்!

இந்த உலகியலில் நாம் அடையும் இன்ப துன்பங்கள் அனைத்தும் வெறும் கனவுகளைப் போன்றவையே என்பது சங்கரர் கருத்து. கனவுகள் அவை அனுபவிக்கப்படும்போது மெய் போலத் தோன்றுகின்றன. ஆனால், விழித்துக் கொண்டவுடனே அவை அத்தனையும் பொய்யாகி விடுகின்றன.

இதுபோல,

அவித்தை என்னும் உறக்கத்தில் நாம் ஆழ்ந்திருக்கும் வரையில், வாழ்வில் நாம் அனுபவிக்கும் இன்பங்களும் துன்

பங்களும் மெய் போலத் தோன்றுகின்றன. அவித்தை நீங்கி நாம் விழிப்பு அடைந்து விட்டால், அவைஅத்தனையும் பொய் யாகப் போய்விடும் என்பதில் ஐயமே இல்லை!

உறக்கத்திலிருந்து விழிப்பு அடைவதற்குப் புலி நம்மைத் துரத்துவது போன்ற ஒரு பொல்லாத கனவு தேவைப்படு கிறது அல்லவா?

இதே போல,

அவித்தையிலிருந்து நாம் விழிப்பு அடைவதற்கும் நம்மால் சமாளிக்க முடியாத பொல்லாத துன்பங்கள் நமக்குத் தேவைப்படுகின்றன!

எனவே,

துன்பங்கள் என்பவை இறைவன் நம் மீது கருணை கூர்ந்து பொழிகின்ற திருவருள் மழையே!

## வாழ்வு இன்பமானது என்பது ஒரு மயக்க உணர்வு

நாம் ஒரே சமயத்தில் எவ்வளவு துன்பங்களைத் தாங்கு வோம் என்பது இறைவனுக்குத் தெரியும். அந்த அளவுக்கு மேல் அவர் நமக்குத் துன்பங்களைத் தருவதில்லை.

இது மட்டும் அல்ல,

நமக்குச் சிறிது துன்பத்தைத் தந்து விட்டால், அதனால் நாம் அடைந்த வேதனையை மாற்றுவதற்காக அடுத்தபடி யாகச் சிறிது இன்பத்தையும் நமக்கு அவர் தந்துவிடுகிறார். இதனால் பழைய துன்பங்கள் மறந்து போய், வாழ்வே இன்ப மயம் என்பது போன்ற ஒரு மயக்க உணர்வை நாம் பெற்று விடுகிறோம்.

இந்த மயக்க உணர்வானது நிலைத்து நிற்கிறதா? இல்லை. அடுத்தாற் போல் ஒரு புதிய துன்பம் வந்து நாம் ஆழ்ந்திருக் கும் இன்ப போதையைக் கலைத்து விடுகிறது: உடனே நாம் மறுபடியும் துன்பத்தில் சிக்கித் துடிக்கிறோம்!

இது எப்படி இருக்கிறது?

இங்கிலாந்தில் வாழ்ந்திருந்த பழங்காலத்துப் பிரபுக்கள், தங்களிடம் சிறைப்பட்டகைதிகளை வாட்டும்போது அனலில் காட்டி வாட்டுவார்களாம். அப்படி வாட்டும்போது அந்தக் கைதிகளின் தோல் கருகிவிடாமல் இருப்பதற்காக, அவர்களின் உடம்பில் அடிக்கடி நிறைய எண்ணெய் தடவுவார்களாம். எண்ணெய் தடவாவிட்டால் உடல் விரைவில் கருகிவிடும். கைதியும் இறந்துபோய் விடுவான். அப்புறம் அவனைத் துன்புறுத்த முடியாது. ஆனால், அவனை உயிர் போகாமல் வைத்துச் சித்திரவதைசெய்யவேண்டும் என்பதே பிரபுவின் நோக்கம். அதற்காக அவர் அவனுக்கு எண்ணெய் தடவுவாராம்!

பிரபு தன் கைதியின் உடலில் எண்ணெய் தடவுவதைப் போன்றதே வாழ்வில் இன்பங்களும்!

அதாவது,

ஒரு சிறு துன்பத்திலேயே மனம் ஒடிந்து மடிந்து போய் விடாமல், மேலும், மேலும் துன்பங்களைத் தாங்கக்கூடிய ஆற்றலை நமக்கு உண்டுபண்ணுவதற்காகவே, இறைவன் அவ்வப்போது நமக்குச் சில இன்பங்களைத் தந்து வருகிறார். கைதி தன் உடம்பில் எண்ணெய் தடவப்படுவதைக் கண்டு மகிழ்ச்சியடைவானானால் அதில் எவ்வளவு மடத்தனம் இருக்கிறதோ, அவ்வளவு மடத்தனம், வாழ்வில் நமக்குக் கிடைக்கும் இன்பங்களைக் கண்டு நாம் மகிழ்ச்சி அடைவதிலும் இருக்கிறது!

அப்படியானால், நாம் கடவுளை நோக்கி, 'இறைவா, எனக்கு மேலும் மேலும் இன்பங்களைத் தந்து கொண்டே இரு' என்று நாம் வேண்டிக் கொள்கிறோமே, அது எவ்வளவு பெரிய பேதமைச் செயல்!

'பிரபுவே என் உடலில் மேலும் மேலும் எண்ணெய் போட்டுக்கொண்டே இருக்கச் சொல்லுங்கள்' என்று கைதி கேட்பது போன்று அல்லவா இருக்கிறது இது!

கைதியை அனலில் வாட்டுவதற்காகத்தானே எண்ணெய் தடவப்படுகிறது? அதே போல, நம்மைத் துன்பத்தில் வாட்டுவதற்காகத்தான் நமக்கு இன்பம் அளிக்கப்படுகிறது!

இந்த உண்மையை உணர்ந்தவர்கள், வாழ்வில் தாங்கள் இன்பங்களை அடைய வேண்டும் என்று ஆசைப்படவே மாட்டார்கள்!

கைதி அறிவு உடையவனாய் இருந்தால் அவன் என்ன கேட்பான்?

'பிரபுவே நீங்கள் எண்ணெய் தடவவும் வேண்டாம், பிறகு என்னை அனலில் வாட்டவும் வேண்டாம். உங்களுக்கு என்பேரில் இரக்கம் இருந்தால் இப்போதே என்னை விடுதலை செய்து விடுங்கள்' என்றுதானே அவன் வேண்டிக் கொள்வான்?

இதேபோல,

நாமும் அறியாமை நீங்கப் பெற்றவர்களாய் இருந்தால், 'இறைவா, வாழ்க்கையில் நீங்கள் எனக்கு இன்பங்களையும் தரவேண்டாம் துன்பங்களையும் தரவேண்டாம். இன்பம் துன்பம் இரண்டிலிருந்தும் கருணை காட்டி எனக்கு விடுதலை அளித்து விடுங்கள்' என்றுதான் நாம் வேண்டிக்கொள்ள வேண்டும்!

## இந்த உலகம் ஒரு மாயையா?

'உலகம் ஒரு மாயையா?' என்பது வேதகாலம் தொட்டே நம் பாரத நாட்டில் எழுப்பப்பட்டு வந்துள்ள ஒரு பழமையான விவாதம்!

கௌதமபுத்தரிலிருந்து,

சங்கரர், இராமானுஜர், மத்துவர், மெய்கண்டார்போன்ற சமயாச்சாரிகள் வரையில் எல்லாருமே இந்தச் சர்ச்சையில் மிக ஈடுபட்டிருக்கிறார்கள்'

இவர்களில் சிலர், 'உலகம் ஒரு மாயையே' என்று வலியுறுத்தியிருக்கிறார்கள். மற்றும் சிலர், 'உலகம் ஒரு மாயை அல்ல' என்று வாதாடியிருக்கிறார்கள்.

'உலகம் ஒரு மாயையாய் இருந்தால் என்ன, இல்லா விட்டால் என்ன? இதெல்லாம் சமயத் துறையாளர்களுக்கும் வேதாந்த ஆராய்ச்சியாளர்களுக்கும் உரிய பிரச்னை. இதைப் பற்றி நமக்கு என்ன வந்தது?' என்றுஎண்ணத் தோன்றுகிறது அல்லவா?

அப்படி எண்ணுவது தவறு.

ஏனென்ருல்,

உலகில் நாம் இனிதாக வாழ்வு நடத்துவதற்கான அடிப் படையே உலகம் ஒரு மாயையா அல்லவா என்பதில் தான் அடங்கியிருக்கிறது.

முதலில்,

மாயை என்ருல் என்ன என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

மாயை என்னும் சொல்லுக்கு, பொய்மை என்று சிலர் பொருள் கொள்கிருர்கள்.

இது தவறு.

மாயை என்பது பொய்த் தோற்றம். பொய்மை என்பது வேறு, பொய்த் தோற்றம் என்பது வேறு.

பெயரளவில் மட்டுமே இருப்பதாய் உள்ள ஓர் இல் பொருளுக்குப் பொய்மை என்று பெயர்.

எடுத்துக்காட்டாக,

மலடியின் மைந்தன், குதிரையின் கொம்பு ஆகிய இவை யெல்லாம் பொய்மைகள்.

பொய்மைப் பொருள்கள் நம் புலன்களுக்குத் தோன்ற மாட்டா. ஆனுல் உலகம் நம் எதிரே தோற்றம் அளிக்கிறது. ஆகையால், அது ஒரு பொய்மைப் பொருள் அல்ல!

எனினும்,

உலகம் என்ற இந்தக் காட்சிப் பொருள், ஒரு பொய்த் தோற்றமா மெய்த் தோற்றமா என்பது அடுத்த கேள்வி,

'உலகம் ஒரு மெய்த் தோற்றம்' என்பது சில பெரியவர்களுடைய கொள்கை.

'அல்ல. அது பொய்த் தோற்றம்' என்பது மற்றும் சில பெரியவர்களுடைய கொள்கை.

மெய்த் தோற்றம் என்பது என்ன? பொய்த் தோற்றம் என்பது என்ன?

கயிறு கயிருகவே தோன்றுவது மெய்த் தோற்றம். மங்கலான வெளிச்சத்தின் காரணமாகக் கயிறு பாம்பாகத் தோன்றுவது பொய்த் தோற்றம்.

கயிறு, பாம்பாகத் தோன்றும் போது பாம்பு என்பது அந்த இடத்தில் இல்லாத ஒரு வேற்றுப் பொருள்.

வேறு எங்கேயோ எப்போதோ நாம் ஒரு பாம்பைப் பார்த்திருக்கிருேம். அந்தப் பாம்பின் வடிவத்தை இங்கே இப்போது நம் கண் எதிரே கிடக்கும் ஒரு கயிற்றின் மீது நம்மையும் அறியாமலேயே நாம் கற்பனை செய்து பார்க்கப் படுகிற பொய்த் தோற்றத்துக்கே மாயை என்று பெயர்.

கயிறு என ஒன்று இல்லாவிட்டால் அதிலே பாம்பு என்ற ஒன்றை நாம் கற்பனை செய்து பார்க்க முடியாது. கயிறு மெய்ப் பொருள். பாம்பு, அந்த மெய்ப் பொருளை ஆதரமாகக் கொண்டு தோற்றம் அளிக்கின்ற மாயை.

இப்போது உலகம் மாயை என்ருல் அதற்கு ஆதாரமாகிய பொருள் ஒன்று இருக்க வேண்டும். அல்லவா? அந்த மெய்ப்பொருள்தான் இறைவன்.

மங்கலான வெளிச்சத்தின் காரணமாகக் கயிறு பாம்பாகக் காட்சியளிக்கிறது. இதே போல், நம்முடைய மந்தமான அறிவின் காரணமாக இறைவன் உலகமாகக் காட்சியளிக்கிருர்.

கண்பார்வை குன்றியவர்களுக்குப் பாம்பாகக் காட்சியளிக்கக் கூடிய தன்மை கயிற்றுக்கு இருப்பதுபோல,

அறிவின் பார்வை குன்றியவர்களுக்கு உலகமாகக் காட்சியளிக்கக்கூடிய தன்மை அல்லது சக்தி, கடவுளுக்கு உண்டு.

இந்தச் சக்திக்கே மகாமாயை என்று பெயர்.

அதாவது,

உலகம் மாயை. உலகமாகக் காட்சியளிப்பதற்கான கடவுளின் சக்தி மகா மாயை. இந்த மகாமாயையே ஆலயங்களில் அம்பிகையின் வடிவமாக வைத்து வழிபடப் படுகிறது!

இறைவனை ஒரு கவிஞனுகக் கூறினுல், அவனது கற்பனு சக்தியே மகா மாயை. அந்தக் கற்பனையில் தோன்றிய காவியமே மாயையாகிய இவ்வுலகம்.

ஒரு காவியத்தைப் படிக்கும் போது சில இடங்களில் நமக்குச் சிரிப்பு வருகிறது. சில இடங்களில் அழுகை வருகிறது. ஆனுல் இந்தச் சிரிப்பும் அழுகையும் நம்முடைய சொந்த இன்ப துன்பங்களின் விளைவுகள் அல்ல. கதையில் வரும் பாத்திரங்களுக்கு நேருகிற இன்ப துன்பங்களின் விளை வாக நம் உள்ளத்திலே ஊற்று எடுக்கிற இரச உணர்ச்சிகள் அவை.

இந்த உலகத்தையும் நாம் ஏன் ஒரு காவியம் போலச் சுவைத்து மகிழக் கூடாது? அவ்வாறு சுவைத்து மகிழ்வதற்கு நம்மால் ஏன் முடியாமல் போகிறது?

காவியத்தில் வரும் நிகழ்ச்சிகள் கவிஞனின் படைப்புக் களே அன்றி மெய்யானவை அல்ல என்னும் உணர்வு அந்தக் காவியத்தைப் படிக்கும்போது நம் உள்ளத்தை விட்டு அகலுவதில்லை. அதனுல் அந்தக் காவியம் நமக்கு ஒரு நவ ரசக் களஞ்சியமாகத் திகழ்கிறது.

உலகியலில் நாம் காணும் நிகழ்ச்சிகளை இறைவனின் கற்பனைப் படைப்புக்களாக நாம் கருதுவதில்லை. அவை, முற்றிலும் மெய்யானவை என்றே நாம் கருதுகிறேம்,

கயிற்றில் தோன்றுகின்ற பாம்பை மெய்யான பாம்பு எனக் கருதித் திடுக்கிடுவதைப் போன்ற ஒரு செயலே அது.

நாம் ஏன் அப்படித் திடுக்கிடுகிறோம்? எங்கேயோ எப்போதோ ஒரு மனிதனைப் பாம்பு கடித்து அவன் இறந்து போனதை நாம் கண்டிருக்கிறோம். அல்லது கேட்டிருக்கிறோம். நாம் கயிற்றிலே பாம்பைக் காணும்போது நமக்கு அந்த நினைவு வருகிறது. அதனால் நாம் திடுக்கிடுகிறோம்.

இதேபோல, எங்கேயோ எப்போதோ காட்டுப் பாதையில் சென்றுகொண்டிருந்த ஒரு மனிதனை, திருடன் ஒருவன் வழிமறித்துக் கொள்ளையடித்துச் சென்ற செய்தியை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். இப்போது நாம் வேறொரு காட்டுப் பாதை வழியே தனிமையில் சென்றுகொண்டிருக்கையில், யாரோ ஒரு மனிதன் நம் எதிரே வருகிறான். உடனே நாம் முன்பு கேள்விப்பட்ட அந்தச் செய்தி நம் நினைவுக்கு வருகிறது. அது நினைவுக்கு வந்ததும் நம் எதிரே வந்து கொண்டிருக்கிற அந்த மனிதனும் ஒரு திருடனாய் இருப்பானோ என்று நம் உள்ளம் அஞ்சி நடுங்குகிறது!

நம் எதிரே வந்து கொண்டிருக்கும் அந்த மனிதன், உண்மையில் மிகவும் நல்லவனாக இருக்கக் கூடும். ஒரு வேளை, காட்டில் தலைமறைவாய்த் திரிகிற ஒரு பெரிய திருடனைப் பிடிப்பதற்காக மாறு வேடத்தில் வந்து கொண்டிருக்கும் ஒரு போலீஸ் அதிகாரியாகக்கூட அவன் இருக்கலாம். இருந்தாலும், நம்முடைய அறியாமையால் அவனை நாம் திருடன் ஆக்கிப்பார்த்து உள்ளத்தில் அச்சம் அடைகிறோம்.

உலக வாழ்க்கையில் நமக்கு ஏற்படுகிற ஒவ்வொரு அச்சமும் இதைப் போன்றதுதான்!

மங்கலான கண் பார்வையின் காரணமாகக் கயிற்றைப் பாம்பு என்று கருதுவதுபோல, உண்மையான பாம்பையும் நாம் ஒரு கயிறு அல்லது பூமாலை என்று கருதலாம் அல்லவா?

இதேபோல,

நம்முடைய பேதைமையின் காரணமாகத் தீமையையும் நன்மையென்று நாம் நம்பி விடுவது உண்டு. மாரீசன், மான் வடிவத்தில் வந்தபோது, சீதை அப்படித்தான் நம்பினுள்.

எவளோ கிராமப் பெண் ஒருத்தி நகரத்துக்குப் போய் அங்கே ஒரு சினிமா நட்சத்திரம் ஆகிவிட்டதைக் கேள்விப் படுகிருள் மற்ருெரு கிராமப்பெண்.

உடனே,

தானும் அவ்வாறு நகரத்துக்குப் போனுல் ஒரு சினிமா நட்சத்திரம் ஆகிவிடலாம் என்று அவள் மனக்கோட்டை கட்டுகிருள். இவ்வாறு மனக்கோட்டை கட்டிக் கொண்டு பட்டினத்துக்கு வருகிறவர்களில் 100க்கு 99பேர் படுதோல்வி அடைகிருர்கள் என்பது மட்டும் அல்ல, அவர் களுடைய வாழ்க்கையே பாழாகி விடுகிறது என்பது உல கறிந்த உண்மை.

சுருக்கமாகச் சொன்னுல்,

வேறு எப்போதோ எங்கேயோ நமக்குக் கிடைத்த ஓர் அனுபவத்தை இப்போது இங்கே நடக்கும் ஒரு நிகழ்ச்சியின் மீது பொருத்திப் பார்ப்பதனுல்தான், நம் உள்ளத்தில் நம்பிக் கைகளும் அவநம்பிக்கைகளும் ஏற்படுகின்றன. ஆசையும் கோபமும் எழுகின்றன. பற்றும் பல பாசங்களும் பிறக் கின்றன. செருக்கும் பொருமையும் உதிக்கின்றன. விருப்பும் வெறுப்பும் தோன்றுகின்றன.

பொதுவாக,

இன்பம் என்ருல் என்ன?

துன்பம் என்ருல் என்ன?

இன்ப துன்பங்களைப் பற்றிய ஒரு தலையாய இரகசியம் என்னவென்ருல்,

ஒரு நன்மை நமக்குவரப்போகிறது என்று எதிர்பார்க்கும் மனநிலை இருக்கிறதே, அதுதான் இன்பம் எனப்படுவது.

ஒரு தீமை நமக்கு வரப்போகிறது என்று எதிர்பார்க்கும் மனநிலை இருக்கிறதே, அதுதான் துன்பம் எனப்படுவது.

அதாவது,

வாழ்வில் நாம் அனுபவிக்கிற இன்பமும் துன்பமும் வெறும் மன நிலையேயன்றி வேறு அல்ல.

அந்த மனநிலைகள் நம்முடைய அறியாமையின் காரண மாகவே ஏற்படுகின்றன.

கயிற்றைக் கண்டு பாம்பு என நினைத்து, அந்தப் பாம்பி னுல் விளையக்கூடிய கேடுகளை நமக்கு நாமே கற்பனை செய்து கொண்டு துன்பத்திற்கு ஆளாவது ஒரு வகை அறி யாமை!

கட்டாந்தரையில் தோற்றம் அளிக்கின்ற கானல் நீரை உண்மையான அருவி நீர் என்று நினைத்து, அதைக் குடித்தும் அதில் குளித்தும் நம் சோர்வைப் போக்கிக் கொள்ளலாம் என்று நமக்கு நாமே கற்பனை செய்து கொண்டு ஆனந்தப் படுவது மற்றொரு வகையான அறியாமை.

இதிலிருந்து என்ன தெரிகிறது?

வாழ்வில், நாம் ஒரு நன்மையை எதிர்பார்த்து ஆனந்தப் படுவதும் அறியாமையே! ஒரு தீமையை எதிர்பார்த்துத் துக்கப்படுவதும் அறியாமையே!

ஒரு பொருள் நமக்கு இன்பத்தைத் தரும் என்று கருதி அதன் மீது விருப்பம் கொள்வதும் அறியாமையே!

இதே போல,

ஒரு பொருள் நமக்குத் துன்பத்தைத் தரும் என்று கருதி அதன்மீது வெறுப்புக் கொள்வதும் அறியாமையே!

இந்த அறியாமையிலிருந்து நாம் விடுபட்டால், அதற்கு அப்புறம் எதன் மீதும் எவர் மீதும் வெறுப்பும் கொள்ள மாட்டோம். விருப்பும் கொள்ள மாட்டோம்.

விருப்பு, வெறுப்பு இந்த இரண்டையும் கடந்த உயரிய சாந்தி நிலையை நாம் அடைந்து விட்டவர்கள் ஆவோம். அந்தச் சாந்தி நிலையே கடவுள் நிலை!

உலகம் ஒரு மாயையாக, அதாவது பொய்த்தோற்றமாக இருந்தாலன்றி, இத்தகைய கடவுள் நிலையை எந்த ஒரு மனிதனும் எந்தக் காலத்திலும் அடையவே முடியாது. இயேசுநாதர், இராமலிங்கர், அரவிந்தர், விவேகானந்தர் போன்ற ஞானியரும் யோகியரும் உலகில் தோன்றியிருக்கவே மாட்டார்கள்.

ஏனென்றால்,

உலகம் ஒரு மாயை அல்லாத மெய்த் தோற்றமாக இருந்தால்,

உலகியல் வாழ்க்கையில் நமக்கு ஏற்படுகிற இன்பங்களும் துன்பங்களும், வெறும் கற்பனையான மனநிலைகளாக இருக்காமல் மெய்யான அனுபவங்களாகவே இருந்துவிடும்.

இன்ப துன்பங்கள் மெய்யானவையாக இருந்துவிட்டால் இன்பத்தின் மீது விருப்பு, துன்பத்தின் மீது வெறுப்பு இந்த இரண்டையும் நம்மால் கடந்துவிட முடியாது.

விருப்பு வெறுப்புக்கள் கடக்கப் பட்டாலன்றி எவராலும் சாந்தி நிலையை எய்த முடியாது. ஒரு சாதாரண மனிதனை மகானாக உயர்த்துவது அந்தச் சாந்தி நிலையே ஆகும்.

அந்த உயரிய நிலையை அடைவதற்கு உலகியலில் காணப் படுகிற இன்பங்களும் துன்பங்களும் வெறும் பொய்த் தோற்றங்களே என்னும் உணர்வு நம் உள்ளத்தில் வேரூன்றி விளங்க வேண்டும்.

அப்படி

விளங்குமானால்,

இந்த உலகியல் நிகழ்ச்சிகள் அனைத்தையுமே ஒரு மாபெரும் காவியத்தின் நிகழ்ச்சிகளைப் போன்று நாம் மனத்தால் சுவைத்து மகிழ்ச்சியுற முடியும்.

அத்தகைய பரிபக்குவத்தைப் பெறுவதற்கு நாம் செய்ய வேண்டியது என்னவென்றால்,

1. எந்த ஒரு மனிதனும் நமக்கு நன்மை செய்வான் என்று நினைக்கவும் கூடாது. நமக்குத்தீமை செய்வான் என்று நினைக்கவும் கூடாது. நமக்கு நன்மை தீமைகளைச் செய்வது நம்முடைய மனமே அன்றி, மனிதர்களோ, தேவதைகளோ, நவக்கிரகங்களோ அல்லர்.

2. எந்த ஒரு மனிதனையும் நம்மைவிட உயர்ந்தவன் என்றும் நினைக்கக்கூடாது. தாழ்ந்தவன் என்றும் நினைக்கக் கூடாது. இதே போல், நம்மைப்பற்றியும் நாம் உயர்ந்தவர் கள் என்றோ தாழ்ந்தவர்கள் என்றோ நினைத்துக் கொள்ளக் கூடாது.

இந்த இரண்டு விதிகளையும் கடைப்பிடித்தால்,
நம்மால்
அடைய முடியாத
உயர்ந்த நிலை
உலகில்
எதுவுமே
இல்லை !

## மனிதன் எதையும் செய்வதில்லை !

ஆற்றல் மிகுந்த மன வலிமை நம்மில் பெரும்பாலோ ருக்கு இருப்பதில்லை. அப்படி இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். அப்போதும்கூட சந்தர்ப்ப சூழ்நிலைகள் நம்மைப் பாவச் செயல்களுக்கு ஆளாக்கிவிடக் கூடும்.

தருமபுத்திரரைக் காட்டிலும் அற நெறியில் நின்ற வர்கள் எவருமே இலர். அப்படியிருந்தும், அவர் சூதாட்டம் என்னும் பாவச் செயலுக்கு ஆளாகிக் கெட்டார் !

அகல்யையைக் காட்டிலும் கற்பு நெறியில் நின்ற காரிகையர் எவருமே இலர். அப்படியிருந்தும் அவள் காமம் என்னும் பாவச் செயலுக்கு ஆளாகிக் கெட்டாள்!

பரீட்சித்தைக் காட்டிலும் நீதி நெறியில் நின்றவர்கள் எவருமே இலர். அப்படியிருந்தும். அவன் பெரியோரைப் பிழைத்தல் என்னும் பாவச்செயலுக்கு ஆளாகிக்கெட்டான்!

அக்ரூரரைக் காட்டிலும் உத்தமரான கிருஷ்ண பக்தர் எவருமே இலர். அப்படியிருந்தும் சியமந்தகம் என்ற மணிக்காக அவர் அந்தக் கிருஷ்ணனுக்கே துரோகம் இழைத்தல் என்னும் பாவச் செயலுக்கு ஆளானுர் !

இப்படியாக,

நம்மால் தெய்வம்போல் வணங்கத்தக்க பெரியோர்களெல்லாம், ஒவ்வொரு சமயங்களில் பாவச்செயல்களுக்கு ஆளாகியுள்ள செய்திகள், நமது புராண இதிகாசங்களில் மலிந்து கிடக்கின்றன. அப்புறம் நம் போன்றவர்கள் எம்மாத்திரம் ?

மிகச் சிறந்த பெரியோர்களும்கூட, ஏன் சில சமயங்களில் பாவம் செய்து விடுகிருர்கள் என்பது இங்கே நமது சிந்தனைக்கு உரியது. இந்தக் கேள்விக்கு விடை காண வேண்டுமானுல், நாம் பகவத்கீதையைப் புரட்டவேண்டும்.

'கிருஷ்ண, பாவம் செய்வதற்கு விருப்பம் இல்லாத மனிதன்கூட, ஏதோ ஒரு சக்தியினுல் பலாத்காரமாக இயக்கப்பட்டவன் போன்று, சில சமயங்களில் பாவத்தைச் செய்துவிடுகிருன். அது எதனுலே?' என்று கேட்கிருன் அர்ஜுனன்.

இந்தக் கேள்விக்கு மிகவும் விரிவான பதில்கள் பரமாத்மாவால் அளிக்கப்பட்டுள்ளன. அந்தப் பதில்களின் சாரம் அனைத்தையும் திரட்டி வைத்தாற்போன்று கீதையில் ஒரு சுலோகம் வருகிறது.

உலகில் நடைபெறும் காரியங்களெல்லாம் மனிதர்களிடத்திலே உள்ள குணங்களால் செய்யப்படுபவையே

அன்றி, அந்த மனிதர்களால், அதாவது ஆன்மாக்களால் செய்யப்படுபவை அல்ல. இந்த உண்மையை உணராத மூடர்கள், அவற்றைத் தாங்கள் செய்வதாக எண்ணிக் கொள்கிறார்கள்.

இதுதான் அந்த சுலோகத்தின் பொருள்.

அதாவது,

மனிதன் 'நான் அதைச் செய்தேன்-இதைச் செய்தேன்" என்று பேசுகிறான் அல்லவா? உண்மையில் அவன் எதையுமே செய்வதில்லை. அவனது மனத்திலோ, வாக்கிலோ, உடலிலோ நிகழுகின்ற எல்லாச் செயல்களும் அவனிடத்தே உள்ள குணங்களால்தாம் இயற்றப்படுகின்றன !

## குணங்கள் என்பது என்ன ?

ஒவ்வொரு மனிதனுக்கும் உயிர் எனப்படுகிற ஆன்மா ஒன்று இருக்கிறது. அந்த ஆன்மாவுக்குப் பற்றுக்கோடாக உள்ள உடல் ஒன்றும் இருக்கிறது.

உடலுக்குள்ளே சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தையும் அறிந்து அனுபவிக்கின்ற மனம் ஒன்று இருக்கிறது. இந்த ஐந்தினுக்கும் அப்பாற்பட்ட பொருள் களைப்பற்றியும்கூடச் சிந்தனை செய்ய வல்ல புத்தி ஒன்று இருக்கிறது. எதற்கெடுத்தாலும் உணர்ச்சி வசப்படுகிற அகங்காரம் ஒன்று இருக்கிறது.

இந்த அகங்காரம், புத்தி, மனம் இவற்றிற்கெல்லாம் தாயாக விளங்குகிற பொருள் ஒன்று உண்டு. அதற்குப் பெயர் பிரகிருதி. அதனை மூலப் பிரகிருதி என்று சொல்லு வார்கள்.

அகங்காரம், புத்தி, மனம் இவை உள்ள மண் வான் வளி புனல் அனல் என்னும் ஐம்பெரும் பூதங்களும், அந்தப் பூதங்களின் குணங்களாகிய சுவை ஒளி ஊறு ஓசை நாற்றங் களும், அவற்றை உணரும் சக்திகளாய் நம் உடலிலே

அமைந்துள்ள மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்புலன்களும், இன்னும் நம் உடலை உள் நின்று இயக்கிக் கொண்டிருக்கிற ஐந்து வகையான பிராணசக்திகளும் ஆகிய இவை எல்லாமே அந்த மூலப் பிரகிருதியிலிருந்து தோன்றியவைதாம்.

அதாவது,

பூதங்கள் ஐந்து, அந்தப் பூதங்களின் குணங்களும்ஐந்து' அந்தக் குணங்களை அறிகின்றவைகளாக நம் உடம்பிலே விளங்கிக் கொண்டிருக்கின்ற புலன்களும் ஐந்து, அந்த உடம்பை உள்நின்று இயக்கிக் கொண்டிருக்கிற பிராண சக்திகள் ஐந்து—ஆக இந்த இருபதும்,

அகங்காரம், புத்தி, மனம் என்னும் மூன்றும்,

ஆக மொத்தம் இருபத்துமூன்று பொருள்கள் மூலப் பிரகிருதியிலிருந்து தோன்றுகின்றன.

இந்த இருபத்துமூன்று பொருள்களோடு மூலப்பிரகிருதி யையும் சேர்த்து இருபத்துநாலு தத்துவங்கள் என்று பேசப்படுவது மரபு.

நம்முடைய உயிர் எனப்படுகிற ஆன்மாவானது இந்தத் தத்துவக் கூடத்திலே சேர்ந்தது அல்ல. அது இந்தத் தத்துவங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டது. ஆனுல், ஒரு பழுக்கக் காய்ச்சிய இரும்பு உருண்டையிலே இரும்பும் நெருப்பும் இரண்டறக் கலந்து விளங்குவதுபோல, ஆன்மா வானது தத்துவக் கூட்டங்களோடு இரண்டறக் கலந்து விளங்கிக்கொண்டிருக்கிறது.

மண்ணிஞல் செய்யப்பட்ட குடம், பானை, சட்டி, கலயம் போன்ற பலவகைப் பாண்டங்களும், பெயர்களும், வடிவங்களும் வெவ்வேருக இருந்தாலும், அவை அனைத் திற்கும் மண் ஒன்றுதானே மூலப்பொருளாய் இருக்கிறது.

இதே போல,

இவ்வுலகிலே காணப்படுகிற அல்லது அறியப்படுகிற அனைத்துப் பொருள்களுக்கும் பிரகிருதி ஒன்றேதான் மூலப் பொருளாய் இருக்கிறது.

அதாவது,

நம்முடைய மனம், அந்த மனத்திலே தோன்றுகிற எண்ணங்கள், உணர்ச்சிகள் போன்ற மிக நுண்ணிய பொருள்களிலிருந்து,

கடல்கள், மலைகள், சூரியன், சந்திரன், விண்மீன்கள், காற்று, நெருப்பு, போன்ற பளுப்பொருள்கள் வரையில்,

எல்லாமே மூலப் பிரகிருதியினால்தாம் ஆக்கப்பட்டு இருக்கின்றன.

அப்படியானால்,

இந்த மூலப் பிரகிருதி எதனால் ஆக்கப்பட்டு இருக்கிறது என்னும் கேள்வி எழுகிறது அல்லவா?

அந்த மூலப் பிரகிருதியானது, சத்துவகுணம், இரஜோ குணம், தமோகுணம் என்னும் மூன்று குணங்களால் ஆக்கப்பட்டிருக்கிறது.

இந்த மூன்று குணங்களும் சமமான அளவில் ஒன்று பட்டிருக்கும் நிலையே மூலப் பிரகிருதி எனப்படுவது.

## பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், ஈஸ்வரன்

சத்துவகுணம், இரஜோகுணம், தமோகுணம் இந்த மூன்றும் எப்போதுமே சமமான அளவில் ஒன்றுபட்டு இருந்துவிடுமானால், இந்த உலகத்தில் எந்த ஓர் இயக்கமுமே இருக்கமாட்டாது. ஏன்? இந்த உலகமே தோன்றியிருக்க மாட்டாது!

சூரிய சந்திரர்கள் உள்பட, இந்த உலகு அனைத்தும் அறவே அழிந்து போய்விடுகிற ஒரு காலத்தைப் பிரளய காலம் என்று சொல்லுவார்கள். அந்தப் பிரளய காலத்திற்குப் பிறகு உலகு மறுபடியும் புதிதாக உற்பத்தியாகும்.

பிரளயத்தைச் சங்காரம் என்றும், உற்பத்தியைச் சிருஷ்டி என்றும் சொல்லுவார்கள். சங்காரம், சிருஷ்டி இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில், உலகம் இருக்காது. வெறும் சூன்யம்தான் இருக்கும். அந்தச் சூன்யநிலை ஒன்றில் மட்டுமே சத்துவகுணம் இரஜோகுணம் தமோகுணம் ஆகிய இந்த மூன்றும் சமமான அளவில் ஒன்றுபட்டு இருக்கும்.

எனவே,

அந்தச் சூன்யநிலை மாறி மறுபடியும் உலகம் படைக்கப் பட வேண்டுமானால் மூலப் பிரகிருதியில் உள்ள முக்குணங் களும் சமமான அளவில் இல்லாமல், தமக்குள் ஏற்றத் தாழ்வுகளை அடைய வேண்டும். அதாவது, மூலப் பிரகிருதி யில் ஒரு கலக்கம் ஏற்படவேண்டும்.

ஆனால் அந்தக் கலக்கம் அதில் தானாகவே ஏற்பட்டுவிட மாட்டாது. அதைக் கலக்குவதற்கு உரிய ஆற்றல், இறைவன் ஒருவனுக்குத்தான் உண்டு. அவன்தான் அதைக் கலக்குகிறான். உடனே உலகம் உற்பத்தி ஆகிறது.

உலகம் உற்பத்தி ஆனவுடன், தன்னுடைய கலக்குகிற தொழிலை அவன் நிறுத்தி விடுவதில்லை. அவன் மேலும் மேலும் கலக்கிக்கொண்டே இருக்கிறான்.

அப்படிக் கலக்கும்போது, சத்துவ குணமும், தமோ குணமும் அடங்கி, இரஜோகுணம் மேலெழுந்து நிற்கும் இடங்களிலெல்லாம் புதிது புதிதான பொருள்கள் படைக்கப் படுகின்றன.

சத்துவகுணமும் இரஜோகுணமும் அடங்கித் தமோ குணம் மேலெழுந்து நிற்கும் இடங்களிலெல்லாம் படைக்கப் பட்ட பொருள்கள் அழிக்கப்படுகின்றன.

இரஜோகுணமும் தமோகுணமும் அடங்கி, சத்துவ குணம் மேலெழுந்து நிற்கும் இடங்களிலெல்லாம் படைக்கப் பட்ட பொருள்கள் அழிக்கப்படாமல் காக்கப்படுகின்றன.

இவ்விதமாக, முக்குணங்களையும் இடையறாது இயக்கிக் கொண்டிருப்பதன் மூலம், படைத்தல், காத்தல், அழித்தல்

என்னும் முத்தொழில்களையும் இடையறுது இறைவன் இயற்றிக்கொண்டே இருக்கிருன். இவ்வாறு இயற்றுகின்ற இறைவனுக்கே ஈஸ்வரன் என்று பெயர்.

ஈஸ்வரனுக்குக் கைகால் போன்ற அவயவங்கள் எதுவுமே கிடையாது. அவன் ஓர் உருவமற்ற அருவப் பொருள். நம்முடைய ஆன்மாவும், ஓர் உருவமற்ற அருவப்பொருள்தான். ஆனுல், அது நம் உடம்பு அனைத்திலும் வியாபித்து நின்று அவ்வுடம்பை இயக்கிக்கொண்டிருக்கிறது அல்லவா? அதேபோல, ஈஸ்வரனும் மூலப் பிரகிருதியில் வியாபித்து நின்று, முக்குணங்களையும் இயக்கிக் கொண்டிருக்கிருன்.

அவ்வாறு இயக்கும்போது இரஜோகுணத்தில் வியாபித்து நின்று, அக்குணத்தை மேலெழச்செய்யும் ஈஸ்வரனுடைய அம்சத்துக்கு, பிரும்மா என்று பெயர்.

சத்துவ குணத்தில் வியாபித்து நின்று. அக்குணத்தை மேலெழச் செய்யும் ஈஸ்வரனுடைய அம்சத்துக்கு விஷ்ணு என்று பெயர்.

தமோ குணத்தில் வியாபித்து நின்று, அக்குணத்தை மேலெழச் செய்யும் ஈஸ்வரனுடைய அம்சத்துக்கு உருத்திரன் என்று பெயர்.

உலகங்களைப் பிரும்மா படைக்கிருர், விஷ்ணு காக்கிருர், உருத்திரன் அழிக்கிருர் என்று கூறப்படுவதன் உட்கருத்து இதுவே!

## சரஸ்வதி, லட்சுமி, பார்வதி, சித்சக்தி

பிரும்மா உலகத்தைப் படைக்கிருர் என்ருல், அவ்வாறு படைப்பதற்கான சக்தி ஒன்று அவரிடம் இருக்கவேண்டும் அல்லவா? அந்தச் சக்திக்கே சரஸ்வதி என்று பெயர்.

விஷ்ணு உலகத்தைப் பாதுகாக்கிருர் என்ருல், அவ்வாறு பாதுகாப்பதற்கான சக்தி ஒன்று அவரிடம் இருக்கவேண்டும்

அல்லவா? அந்தச் சக்திக்கே இலக்குமி அல்லது லக்ஷ்மி என்று பெயர்.

உருத்திரன் உலகத்தை அழிக்கிருர் என்ருல், அவ்வாறு அழிப்பதற்கான சக்தி ஒன்று அவரிடம் இருக்கவேண்டும் அல்லவா? அந்தச் சக்திக்கே பார்வதி என்று பெயர்.

பிரும்மா விஷ்ணு உருத்திரன் இந்த மூவருமே ஈஸ்வரனுடைய அம்சங்கள் அல்லவா? எனவே, பிரும்மாவிடத்தும், விஷ்ணுவிடத்தும், உருத்திரனிடத்தும் விளங்குகிற சக்தி உண்மையில் ஈஸ்வர சக்தியின் அம்சங்களே தவிர வேறல்ல. பிரும்ம சக்தியான சரஸ்வதியையும், விஷ்ணு சக்தியான இலக்குமியையும், உருத்திர சக்தியான பார்வதியையும் தனது அம்சங்களாகப் பெற்றுள்ள அந்த ஈஸ்வர சக்திக்கு 'சித்சக்தி' என்று பெயர்.

ஈஸ்வரன் எப்படி ஓர் உருவமற்ற அருவப் பொருளோ, அப்படியே சித்சக்தியும் ஓர் உருவமற்ற அருவப் பொருள் தான். எனினும் ஈஸ்வரனை ஆண்பாலாகவும், சித்சக்தியைப் பெண்பாலாகவும் உருவகப்படுத்திப் பேசுவது சமய நூல்களின் மரபு.

குடம் முழுவதிலும் மண் வியாபித்து இருப்பதுபோல, இந்த உலகு அனைத்திலும் மூலப் பிரகிருதி வியாபித்திருக்கிறது. அந்த மூலப் பிரகிருதி முழுவதிலும் ஈஸ்வரன் வியாபித்திருக்கிருன். ஆகையால், உலகம் முழுவதிலும், உலகில் உள்ள பொருள்கள் முழுவதிலும் ஈஸ்வரன் வியாபகமாய் இருக்கிருன் என்று ஆகிறது.

அப்படி வியாபகமாய் இருந்துகொண்டு ஒவ்வோர் அணுவுக்குள்ளேயும் பரவியிருக்கிற சத்துவ இரஜஸ் தமோ குணங்களை, தன்னுடைய சக்தியாகிய சித்சக்தியைக் கொண்டு இயக்கிக்கொண்டிருக்கிருன். அவன் அப்படி இயக்காவிட்டால், உலகிலே நெருப்பு எரியாது. காற்று வீசாது. நீர் ஓடாது. நிலவுலகம் சுழலாது. அதனுல்தான் 'அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது' என்னும் பழமொழி எழுந்தது.

ஈஸ்வரனுடைய சித்சக்தியானது, நிலம் நீர் காற்று நெருப்புப் போன்ற பருப்பொருள்களை மட்டும்தான் இயக்கு கிறது என்பது அல்ல. முக்குணங்களால் ஆகிய எல்லாப் பொருள்களையுமே அது இயக்குகிறது. நமக்குள்ளே விளங்கிக் கொண்டிருக்கிற அகங்காரம், புத்தி, மனம், ஐம்புலன்கள், ஐந்து வகையான பிராண சக்திகள்—இவை எல்லாமே முக் குணங்களால் ஆனவை அல்லவா? ஆகையால் இவற்றையும் கூட, அந்தச் சித்சக்திதான் இயக்கிக் கொண்டிருக்கிறது!

## ஈஸ்வரனுடைய திருவிளையாடல்கள்

முக்குணங்களின் வாயிலாக ஈஸ்வரனுடைய சித்சக்தி யானது நம்முடைய அகங்காரத்தை இயக்கும்போது நாம் பலவேறு வகையான உணர்ச்சிகளுக்கு ஆளாகிறோம்.

முக்குணங்களின் வாயிலாக, ஈஸ்வரனுடைய சித்சக்தி யானது நம்முடைய புத்தியை இயக்கும்போது, நமக்குப் பல வேறு வகையான கருத்துக்கள் உதிக்கின்றன.

முக்குணங்களின் வாயிலாக ஈஸ்வரனுடைய சித்சக்தி யானது நம் மனத்தை இயக்கும்போது, நமக்குப் பலவேறு வகையான நினைவுகள் எழுகின்றன.

முக்குணங்களின் வாயிலாக ஈஸ்வரனுடைய சித்சக்தி யானது நம்முடைய புலன்களை இயக்கும்போது, நமக்குப் பலவேறு வகையான உலகியல்காட்சிகள், அதாவது, உலகியல் பொருள்களின் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றங்கள் புலப்படு கின்றன.

முக்குணங்களின் வாயிலாக, ஈஸ்வரனுடைய சித்சக்தி யானது நம்முடைய பிராண சக்திகளை இயக்கும்போது, நம் உடம்பின் உள்ளுறுப்புக்களிலும் வெளியுறுப்புக்களிலும் பல வேறு வகையான செயல்கள் நிகழுகின்றன.

எனவே.

நாம் அடைகின்ற உணர்ச்சிகள், செய்கின்ற சிந்தனைகள், எண்ணுகின்ற எண்ணங்கள், காணுகின்ற காட்சிகள், நிகழ்த்துகின்ற செயல்கள் ஆகிய இவை அனைத்துமே,

முக்குணங்களின் வாயிலாக ஈஸ்வரன் புரிகின்ற திருவிளையாடல்களே அன்றி,

நம்முடைய செயலால் எதுவுமே இல்லை என்று ஆகிறது.

'இரயில் வண்டி ஓடுகிறது' என்று நாம் சொல்லுகிறோம். அப்படியென்றால் அது தானாகவே ஓடுகிறது என்பது பொருள் அல்ல. மனிதன் ஒருவன் உள்ளிருந் அதை ஓட்டுகிறான் என்பதே அதன் பொருள்.

இதே போல,

உலகில் நடைபெறும் காரியங்கள் அனைத்தும் முக்குணங்களாலேயே இயக்கப்படுகின்றன என்று பவகத்கீதை கூறுகிறது என்றால்,

அந்தக் காரியங்களைக் குணங்கள் தாமாகவே இயற்றிக் கொண்டிருக்கின்றன என்பது அதன் கருத்து அல்ல.

குணங்களுக்கு உள்ளே நின்று, அவற்றை ஈஸ்வரன் இயக்கிக்கொண்டிருக்கிறான் என்பதே அதன் கருத்து.

'குணங்களை ஈஸ்வரன் இயக்குகிறான் என்பதற்குப் பதிலாக நம்முள் இருக்கும் குணங்களை நம்முடைய ஆத்மாவே இயக்குகிறது என்று கருதுவதில் தவறு என்ன?' என்னும் ஒரு கேள்வி இந்தக் கட்டத்தில் எழக்கூடும்.

இந்த கேள்விக்கு விடை அறிய வேண்டுமானால் முதலில் ஆத்மா என்பது என்ன என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

## முக்குணங்களின் பரிணாமங்கள்

இந்த உலகம் ஒரு மாபெரும் பண்டகசாலையைப் போன்றது. இதில் எல்லா வகையான பொருள்களும் இருக்

கின்றன. இந்தப் பண்டகசாலையில் அல்லாத பொருள்கள் இல்லை என்று சொல்லி விடலாம்.

இந்தப் பொருள்கள் ஒவ்வொன்றினுள்ளும் அவ்வவற்றிற்கு உரிய சில குணங்கள் இருக்கின்றன.

எடுத்துக்காட்டாக,

எலுமிச்சம் பழத்தில் பித்தத்தைப் போக்கும் குணம், நீர் வேட்கையைத் தணிக்கும் குணம், துருவை அகற்றும் குணம், பசியைத் தூண்டி விடும் குணம், இப்படி எத்தனையோ குணங்கள் இருக்கின்றன. இத்தகைய பல வேறு குணங்களின் தொகுதியாக எலுமிச்சம் பழம் விளங்கு கிறது.

உலகில் உள்ள ஒவ்வொரு பொருளும், இம்மாதிரியே சிலகுறிப்பிட்ட குணங்களின் தொகுதியாகத்தான் விளங்கு கின்றன. எந்த எந்தப் பொருள்களில் என்ன என்ன அளவில் அடங்கி இருக்கின்றன என்பதைக் கண்டுபிடிக்கும் ஆராய்ச்சியில் ஆயிரம் ஆண்டுகளாக மனிதன் ஈடுபட்டு வந்திருக்கிறான். அந்த ஆராய்ச்சிக்கே விஞ்ஞானம் என்று பெயர்.

பொருள்களில் காணப்படுகிற இந்தக் குணங்களின் எண்ணிக்கையை எவராலும் அளவிட்டுக் கூற முடியாது. அவை கோடானு கோடிக்கும் மேற்பட்டவையாகும். ஆனால் இந்தக் கோடானு கோடி குணங்களும் மூலப் பிரகிருதியின் பரிமாணங்களே அன்றி வேறல்ல.

ஒரு விதையிலிருந்து எண்ணற்ற இலைகளும், மலர்களும், காய்களும் உற்பத்தியாவது போல,

மூலப்பிரகிருதியில் இருந்தே உற்பத்தி ஆகியிருக்கின்றன.

அந்தக் குணங்களின் பலவேறு வகையான தொகுதிகளே, பலவேறு வகையான உலகியல் பொருள்களாக வடிவெடுத்து விளங்குகின்றன.

மூலப் பிரகிருதி என்பதே சத்துவ ரஜஸ்தமோ குணங் களின் சேர்க்கையாகையால்,

அதன் பரிணாமங்களாகிய உலகியல் பொருள்களிலே காணப்படுகிற கோடிக்கணக்கான குணங்களும் கூட,

அந்தச் சத்துவ ரஜஸ் தமோ குணங்களின் விவகாரங்களே தவிர வேறல்ல.

அதாவது,

சத்துவகுணம், இரஜோகுணம், தமோகுணம் என்னும் முக்குணங்களுள்ளே வெவ்வேறு வகையான அளவுகளில் ஒன்று கலந்து, கோடானுகோடி குணத்தொகுதிகளாகப் பரிணாமம் அடைந்து, உலகியல் பொருள்களாகக் காட்சி அளிக்கின்றன.

இதே போல,

அந்த முக்குணங்களே, வெவ்வேறு வகையான அளவுகளில் ஒன்று கலந்து கோடானு கோடித் குணத் தொகுதிகளாகப் பரிணாமம் அடைந்து ஒவ்வொரு மனிதரிடத்திலும் (மற்றைய உயிர்களிடத்திலும்) காணப்படுகிற தனிப்பட்ட இயல்புகளாகக் காட்சியளிக்கின்றன.

இவ்வாறு ஒவ்வொருவரிடத்திலும் காணப்படுகிற தனிப்பட்ட இயல்பினுக்கே பகவத் கீதையில் ஸ்வபாவம் என்னும் பெயர் வழங்கப்பட்டிருக்கிறது.

## ஆன்மாக்களும் ஈஸ்வரனுடைய அம்சங்களே

ஈஸ்வரன், மூலப் பிரகிருதியில் வியாபித்து நின்று முக்குணங்களையும் இயக்கும்போது;

அதன் இரஜோகுணப் பகுதியில் வியாபித்து நின்று அப்பகுதியை இயக்குவிக்கும் ஈஸ்வர அம்சத்துக்கு விஷ்ணு என்றும்,

அதன் சத்துவகுணப் பகுதியில் வியாபித்து நின்று அப் பகுதியை இயக்குவிக்கும் ஈஸ்வர அம்சத்துக்குப் பிரும்மா என்றும்,

அதன் தமோகுணப் பகுதியில் வியாபித்து நின்று அப் பகுதியை இயக்குவிக்கும் ஈஸ்வர அம்சத்துக்கு உருத்திரன் என்றும்,

பெயர்கள் வழங்கப்படுகின்றன என்பதை நாம் ஏற்கெனவே பார்த்தோம்.

இதே போல,

அந்த முக்குணங்களின் பரிணமங்களாகிய ஸ்வபாவம் எனப்படுகிற குணத் தொகுதிகளில் வியாபித்து நின்று, அந்தக் குணத்தொகுதிகளோடு இரண்டறக் கலந்து விளங்கு கின்ற ஈஸ்வர அம்சங்களுக்கே ஆத்மாக்கள் அல்லது ஆன் மாக்கள் என்று பெயர்.

ஸ்வபாவங்கள் என்னும் குணத்தொகுதிகள் இத்தனை அத்தனை என்று எவராலும் வரையறுத்துக் கூற முடியாது. அவை எண்ணில் அடங்கா.

ஆகையால்,

அந்த ஸ்வபாவங்களில் வியாபித்து நிற்கின்ற ஈஸ்வர அம்சங்களாகிய ஆன்மாக்களும் எண்ணில் அடங்காதவை என்றே சொல்ல வேண்டியதாய் இருக்கிறது.

உலகியல் வழக்கில் நாம் உயிர் என்று எதைச் சொல்லு கிறோமோ, அதைத்தான் தத்துவ வழக்கில் ஆன்மா என்றும் ஜீவன் என்றும் சொல்லுவார்கள்.

ஆனல், சங்கரரின் அத்துவைத சித்தாந்தப்படி, ஆன்மா வுக்கும் ஜீவனுக்கும் ஒரு சிறு வேறுபாடு இருக்கிறது. அதை நாம் பிற்பாடு ஆராய்வோம்.

எனவே,

உலகத்தைப் படைக்கின்ற—காக்கின்ற—அழிக்கின்ற பிரும்மா விஷ்ணு உருத்திரர்கள் எப்படி ஈஸ்வரனுடைய அம்சங்களாக இருக்கின்றனரோ,

அப்படியே,

உலகில் காணப்படுகிற ஜீவராசிகள் அனைத்துமே ஈஸ்வரனுடைய அம்சங்கள்தாம் என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

## ஓர் அடிப்படை வேறுபாடு

பிரும்மா விஷ்ணு உருத்திரர்களுக்கும், மற்றச் சாதாரண ஆன்மாக்களுக்கும் ஓர் அடிப்படையான வேறுபாடு இருக்கிறது.

அதாவது,

ஓர் இரும்பு உருண்டையை அனலில் இட்டுப் பழுக்கக் காய்ச்சுவோமானால்,

அந்த அனலில் ஒரு பகுதியானது இரும்பு உருண்டையோடு இரண்டறக் கலந்து அதை நெருப்பு உருண்டை போல் ஆக்கிவிடுகிறது.

அந்த நிலையில் பழுக்கக் காய்ச்சிய அந்த இரும்பு உருண்டையைப் பார்க்கும்போது, இரும்பு நெருப்பாக இருக்கிறது. அல்லது 'நெருப்பு உருண்டையாக இருக்கிறது' என்றே எண்ணத் தோன்றும்.

இரும்பு உருண்டை பார்ப்பதற்குக் கறுப்பாக இருக்கும். ஆனால் அது இப்போது நெருப்பின் நிறமாகிய செந்நிறத்தைப் பெற்று விளங்குகிறது.

நெருப்புக்கு வடிவம் கிடையாது. ஆனால் அது இப்போது இரும்பின் வடிவமாகிய உண்டை வடிவத்தைப் பெற்று விளங்குகிறது.

அதாவது,

இரும்பு உருண்டையைப் பழுக்கக் காய்ச்சியதன் விளைவாக, இரும்பின் இயல்பை நெருப்பு ஏற்றுக் கொள்ள, நெருப்பின் இயல்பை இரும்பு ஏற்றுக்கொண்டு விட்டது. இரும்பும் நெருப்பும் தத்தம் இயல்புகளைப் பறிமாறிக் கொள்ளும் அளவுக்கு ஒன்று கலந்துவிட்டன.

இவ்வாருக,

ஒரு .பொருளானது தன்னுடைய இயல்பை இழந்து இன்னொரு பொருளின் இயல்பை ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு அதனேடு ஒன்று சேர்ந்து கலந்துவிடுமானுல் அந்த இரண்டுக்கும் உள்ளஉறவை அல்லது தொடர்பைத் தாதாத்மிய சம்பந்தம் என்று தத்துவ ஆசிரியர்கள் கூறுகிருர்கள் !

ஸ்வபாவங்கள் எனப்படுகிற குணத்தொகுதிகளோடு, அவற்றில் வியாபித்து நிற்கிற ஆன்மாக்களுக்கு உரிய தொடர்பானது, மேற்குறிப்பிட்ட தாதாத்மிய வகையைச் சேர்ந்தது.

அதாவது,

அந்த ஆன்மாக்கள் தங்களுடைய ஸ்வபாவங்களிலிருந்து தங்களே வேறு பிரித்து அறிய முடியாத அளவுக்கு, அவற்ருேடு இரண்டறக் கலந்து போய்விட்டன. அத்தகைய கலப்பின் காரணமாகத் தங்களுடைய ஸ்வபாவங்களுக்கு அவை அடிமையாகிவிட்டன !

பிரும்மா விஷ்ணு உருத்திரர்கள் இப்படி அல்லர். அவர்கள் தாங்கள் வியாபித்து விளங்குகிற சத்துவ ரஜஸ் தமோ குணங்களோடு தாதாத்மியப்பட்டு இருப்பதில்லே. அதஞல், அந்தக் குணங்களுக்கு அவர்கள் அடிமையாகி விடுவதில்லே.

லகான் (Reins) எனப்படுகிற கடிவாள வாரோடு, குதிரைக்கும் தொடர்பு இருக்கிறது, அதன்மீது சவாரி செய்கின்ற மனிதனுக்கும் தொடர்பு இருக்கிறது, ஆனுல். குதிரை மட்டுமே லகானுக்கு அடங்கி நடக்கிறது. குதிரையின் லகானுக்கு மனிதன் அடங்கி நடப்பதில்லே. லகானேத் தன் கருவியாகக் கொண்டு குதிரையை அடக்கி நடத்துகிருன் மனிதன்.

பிரும்மா விஷ்ணு உருத்திரர்களுக்கும் அவர்களால் வியாபிக்கப்பட்ட முக்குணங்களுக்கும் உள்ள தொடர்பானது,

குதிரைக்காரனுக்கும் லகானுக்கும் உள்ள தொடர்பைப் போன்றது.

நம்போன்ற ஆன்மாக்களுக்கும், அந்த ஆன்மாக்களால் வியாபிக்கப்பட்ட (ஸ்வபாவங்கள் என்னும்) குணத்தொகுதி களுக்கும் உள்ள தொடர்பானது,

குதிரைக்கும் லகானுக்கும் உள்ள தொடர்பைப் போன் றது.

குதிரையின் வாயிலே கடிவாளம் இருக்கிறது. அந்தக் கடிவாளம் போன்றது ஆத்மாவின் ஸ்வபாவம். கடிவாளத் தோடு சேர்த்துக் கட்டப்பட்டுள்ள லகானைப் போன்றவை சத்துவ ரஜஸ் தமோ குணங்கள்.

பிரும்மா விஷ்ணு உருத்திரர்கள், சத்துவ ரஜஸ் தமோ குணங்களை லகானாகக் கொண்டு ஆன்மாக்கள் என்ற குதிரைகளை அடக்கி நடத்துகின்றனர்.

எனவே,

பிரும்மா விஷ்ணு உருத்திரர்கள் ஆண்டவர்கள். நம்மைப் போன்ற சாதாரண ஆத்மாக்கள் அடிமைகள். இதுவே பிரும்மா விஷ்ணு உருத்திரர்களுக்கும் மற்றைய ஆன்மாக் களுக்கும் இடையிலான அடிப்படை வேறுபாடு.

## சில நியாயமான கேள்விகள்

எனவே,

ஸ்வபாவங்களோடு தாதாத்மியப்பட்டு இருக்கும் வரை யில், ஆன்மாக்கள் தங்கள் அடிமைத் தளையிலிருந்து விடு படவே முடியாது. அந்த ஸ்வபாவங்கள் எப்படியெல்லாம் அவர்களை ஆட்டி வைக்கின்றனவோ, அப்படியெல்லாம் அவர்கள் ஆடிக்கொண்டிருக்க வேண்டியதுதான்!

ஸ்வபாவங்கள் முக்குணங்களால் ஆகியவை என்பதை நாம் ஏற்கெனவே தெரிந்து கொண்டோம்.

எனவே,

ஸ்வபாவங்களால் ஆட்டி வைக்கப்படுகிற ஆன்மாக்கள், அந்த ஸ்வபாவங்களுக்கே மூலப் பொருள்களாகிய முக்குணங் களின் மீது எவ்வாறு ஆட்சி செலுத்த முடியும் ?

ஆகையால்,

நம் முன்னே இருக்கும் குணங்களை நமது ஆத்மாவே இயக்குகிறது என்று கருதுவது மிகப் பெரும் தவறு ஆகும். அந்தக் குணங்களை ஈஸ்வரன்தான் இயக்கிக் கொண்டிருக் கிறான். அவன் ஒருவனால்தான் அவற்றை இயக்கவும் முடியும்.

குணங்களை ஈஸ்வரன் இயக்குகிறான் என்னும்போது ஜீவர்கள், கேவலம், பாவைக் கூத்திலே கூத்தாடுகிற பொம் மைகளைப் போல் ஆகிவிடுகிறார்கள். அந்தப் பொம்மைகளை ஆட்டிவைப்பவன் ஈஸ்வரன். முக்குணங்கள் அவன் கையில் பிடித்திருக்கும் கயிறுகள்.

இவ்வாறு, நம் மன மொழி மெய்கள் அனைத்தையும் இயக்கிக் கொண்டிருக்கிற ஈஸ்வரன், எப்போதுமே அவற் றைப் பாபச் செயல்களில் ஈடுபடுத்தாமல், புண்ணியச் செயல்களில் மட்டுமே ஈடுபடுத்திக்கொண்டிருந்தால் என்ன? அவற்றை அவன் பாபச் செயல்களில் ஈடுபடுத்துவதால் தானே, நாம் பாபங்களுக்கு ஆளாகி, அவற்றின் விளைவாகத் துன்பங்களையும் அனுபவிக்க வேண்டியதிருக்கிறது?

இது மட்டும் அல்ல.

நமது மன மொழி மெய்களை இயக்குபவன் ஈஸ்வரனாய் இருக்க, அவற்றில் நிகழும் புண்ணியச் செயல்களுக்கோ பாவச்செயல்களுக்கோ நாம் எப்படிப்பொறுப்பு உடையவர் கள் ஆவோம்? அந்தப் புண்ணிய பாவங்களின் பலனாக வரு கின்ற இன்ப துன்பங்களுக்கு நாம் எப்படி உரியவர்கள் ஆவோம் என்னும் கேள்விகளும் எழுகின்றன.

இவையெல்லாம் நியாயமான கேள்விகளே. இந்தக் கேள்விகளுக்கு, ஆதி சங்கரரின் அத்துவைத சித்தாந்தத்தில் என்ன பதில்கள் அளிக்கப்படுகின்றன என்பதை நாம் இப் போது ஆராயவேண்டும்.

## குழப்பங்களிலும் ஓர் ஒழுங்கு நியதி

ஆத்மாவானது அவித்தை என்னும் பெரும் உறக்கத்தில் மூழ்கிக் கிடக்கிறது என்பது அத்துவைத சாஸ்திரங்களின் அடிப்படைக் கருத்து. அந்த அவித்தை எப்போது வந்து ஆத்மாவைப் பற்றியது என்பது எருக்கும் தெரியாது. எவ்வளவு பெரிய கால ஆராய்ச்சியாளர்களாலும் அதைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. அப்படிக் கணக்கிட்டு அறியவேண்டிய அவசியமும் இல்லை. உறக்கத்தில் ஆழ்ந்து கிடப்பவன் விழித்து எழ வேண்டுவதுதான் முக்கியமே தவிர, அவன் எப்போது உறங்கத் தொடங்கினான், ஏன் உறங்கத் தொடங்கினான் என்பது போன்ற ஆராய்ச்சிகள் முக்கிய மானவை அல்ல.

அவித்தை எப்படியோ வந்து ஆன்மாவைப் பற்றிக் கொண்டு விட்டது. அதன் விளைவாக, ஆன்மாவுக்கு, தான் ஈஸ்வரனுடைய அம்சம் என்னும் பேருண்மை மறந்து போய்விட்டது. அந்த மறதியினால் அது தன்னுடைய உண்மை யான பூர்ணத் தன்மை, அதாவது, குறை ஏதும் இல்லாத நிறைவுடைமையை இழந்த, தன்னை அபூர்ணனாக, அதாவது, குறைகளை உடையவனாக எண்ணிக் கொண்டது. அந்தக் குறைகளை நிறைவு செய்வதற்காக, அது தனக்கு அது வேண்டும் — இதுவேண்டும் என்று வேட்கை கொள்ளத் தொடங்கியது.

சின்னஞ்சிறு கைக்குழந்தை ஒன்று தெருவில் விற்கும் ஜவ்வு மிட்டாயை விரும்பிக் கேட்கும்போது 'அந்த மிட்டா யில் ஈக்கள் மொய்க்கின்றன. அது அசுத்தமானது. அதைச் சாப்பிடுவது ஆரோக்கிய விதிகளுக்கு உகந்தது அல்ல' என்று அந்தக் குழந்தையிடம் யாராவது எடுத்துக்கூற முடியுமா? ஆரோக்கிய விதிகளைப் புரிந்து கொள்வதற்கான வயது வரும் வரையில் பெற்றோர்கள் அவற்றைப் பற்றிக் குழந்தையிடம் பேசிப் பயன் இல்லை.

ஜவ்வு மிட்டாயை வாங்கிக் கொடுக்கா விட்டால், குழந்தை அழுது அழுது ஏங்கிப் போய் விடும்போல் இருக்கிறது. அதற்குப் பயந்து பெற்றோர்கள் அதை வாங்கிக் கொடுக்கிறார்கள். கொடுத்துவிட்டு அதைச் சாப்பிட்டதன் விளைவாகக் குழந்தைக்கு நோய்கள் வரும்போது அவற்றைப் போக்குவதற்கான மருந்துகளையும் கொடுக்கிறார்கள்.

ஆன்மாக்களாகிய நாம் பிடிவாத குணமுள்ள இந்தக் குழந்தையைப் போன்றவர்கள். சித்சக்தியும் ஈஸ்வரனும் நம்முடைய தாய் தந்தையரைப் போன்றவர்கள். நம்முடைய அவித்தையின் காரணமாக நாம் நமக்குச் சிறிதும் தேவை இல்லாத வேட்கைகளுக்கெல்லாம் ஆளாகி நிற்கிறோம். நம் மீது உள்ள கருணையின் காரணமாக, நமது வேட்கைகளையெல்லாம் அவர்கள் நிறைவேற்றி வைக்கிறார்கள்.

ஆனால் ஒன்று.

ஆன்மாக்கள் எண்ணற்றவையாகையால், அந்த ஆன்மாக்கள் அனைவரது வேட்கைகளையும் நிறைவேற்றி வைப்பது ஈஸ்வரனுடைய கடமையாகி விடுகிறபடியால், அவர்களில் யார் யாருடைய எந்த எந்த வேட்கைகளை எவ்வெப்போது எப்படி எப்படி நிறைவேற்றுவது என்பதை ஈஸ்வரனேதான் தீர்மானிக்க வேண்டியதிருக்கிறது.

ஒரு நாற்சந்தியில் நிற்கும் பீட் கான்ஸ்டபிள், நாற்புறமும் இருந்து வருகிற கார்கள், பஸ்கள், சைக்கிள்கள், மாட்டு வண்டிகள் முதலியவற்றை எப்படி ஒழுங்குபடுத்தி அனுப்புகிறாரோ, அப்படித்தான் ஈஸ்வரனும் ஜீவர்களின் விருப்பங்களை ஒருங்குபடுத்தி நிறைவேற்றுகிறான்.

பீட் கான்ஸ்டபிள் அந்த இடத்தில் இல்லாவிட்டால் கார்களும் வண்டிகளும் ஒரு கட்டுப்பாடு இன்றி ஓடிச் சென்று, ஒன்றோடு ஒன்று மோதிக்கொண்டு, விபத்துக்களுக்கு ஆளாகிவிடும் அல்லவா? அதே போல, ஈஸ்வரன் ஓர் ஒழுங்குபடுத்தி நடத்தாவிட்டால் ஜீவர்களும் தத்தம் வேட்கைகளை நிறைவேற்றிக் கொள்ளும் ஆர்வத்தில் இந்த உலகத்தையே ஒரு மாபெரும் போர்க்களம் ஆக்கி விடுவார்கள்!

இந்த உலகம் இப்போதே ஒரு போர்க்களம் போல் குழப்பங்கள் மலிந்த நிலையில்தான் காட்சி அளிக்கிறது. ஆனாலும், கொந்தளிக்கும் கடலில் கூட அலைகளுக்கு அடியில் ஓர் அமைதியான ஆழ் நீர்ப்பரப்பு இருப்பது போல, எல்லையற்ற குழப்பங்களுக்கும் மோதல்களுக்கும் இடையே இவ்வுலகியல் நிகழ்ச்சிகளில் ஓர் ஒழுங்கு நியதி காணப்படுகிறது. ஈஸ்வரன் இல்லாவிட்டால் அந்த ஒழுங்கு நியதி இருக்காது!

## நம் ஆசைகளே நமக்குப் பிறவிகளைத் தருகின்றன

தான் வியாபித்துள்ள குணத்தொகுதியோடு தாதாத்மியப்பட்டுள்ள காரணத்தாலேயே, ஆன்மாவுக்கு அபூர்ணத்வம், அதாவது, தன்னைக் குறையுடையவனாக எண்ணிக் கொள்ளும் பான்மை ஏற்படுகிறது. அந்த அபூர்ணத்வமும், அதற்குக் காரணமான தாதாத்மியமும் நீங்கும் வரையில், ஆன்மா ஒன்றில்லாவிட்டால் இன்னொன்றின் மீது வேட்கையுற்றுக் கொண்டே இருக்கும். அப்படி வேட்கையுறும்போது, 'எனக்கு இது கிடைத்து விட்டால் போதும், நான் திருப்தி அடைந்து விடுவேன். எனக்கு அது கிடைத்து விட்டால் போதும், நான் திருப்தி அடைந்து விடுவேன்' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே இருக்கும். ஆனால், உண்மையில் எது கிடைத்தாலும் அது திருப்தி அடையாது!

அப்படியே திருப்தி அடைந்தாலும், அது மிகவும் தற்காலிகமான திருப்தியாகத்தான் இருக்கும். ஒரு வேட்கை நிறைவேறியதனால் ஏற்படுகிற அந்தத் தற்காலிகத் திருப்தியானது, இன்னொரு புதிய வேட்கை எழுந்தவுடன் மறைந்து போய்விடும். இப்படியே ஒவ்வொரு புதிய வேட்கை எழும்போது, அதற்கு முந்தின வேட்கை நிறைவேறியதால் ஏற்பட்ட திருப்தி மறைந்து அதிருப்தி பிறந்துவிடும் ஆத்மாவின் அபூர்ணத்வம் என்றைக்கு நீங்குகிறதோ, அன்றைக்குத்தான் அதனுடைய அதிருப்தியும் நீங்கும்!

ஆத்மாவுக்கும் அதனுடைய ஸ்வபாவத்துக்கும் உள்ள தாதாத்மியம் நீங்கி, அது தன்னுடைய இயல்யான பூர்ணத்

வத்தை எய்தவேண்டும் என்பதே ஈஸ்வரனுடைய இச்சை. அது அப்படி எய்துவதற்காகவே, அதனுடைய வேட்கைகளை யெல்லாம் அவர் நிறைவேற்றி வைக்கிறார்.

அப்படி நிறைவேற்றும்போது, உலகில் எதை அடைந்தாலும் தனக்கு நிரந்தரமான திருப்தி ஏற்படுவதில்லை என்னும் உண்மையை ஆன்மா என்றாவது ஒரு நாள் உணர்ந்தே தீரும். அல்லவா? அந்த உணர்வு வருவதற்குப் பல கோடிப் பிறவிகள், பல கோடிவகையான பிறவிகள் எடுக்க வேண்டிய திருக்கலாம். அவற்றுள் மனிதப் பிறவியும் பல சமயங்களில் ஏற்பட்டு இருக்கலாம். அந்த மனிதப் பிறவிகளுக்குள்ளே ஒரு கடைசிப் பிறவியில், அதற்கு முந்தின எண்ணற்ற பிறவிகளில் பெற்ற அனுபவங்களின் காரணமாக, உலகியல் இன்பங்களில் எதுவுமே நமக்கு உண்மையான நிறைவைத் தர மாட்டா என்னும் மெய்யுணர்வு ஆன்மாவுக்கு உண்டாகும். அவ்வாறு உண்டாகும் நிலையே, ஆன்மாவின் பரிபக்குவ நிலை என்று சொல்லப்படுவது.

அத்தகைய பரிபக்குவ நிலை ஏற்படும் வரையில், ஆயிரம் உபநிடதங்களைப் படித்தாலும், பதினாயிரம் மகான்களின் உபதேசங்களைக் கேட்டாலும், அவையெல்லாம் நம் உணர்விலே பதியமாட்டா. ஏன், இறைவனே நம் எதிரில் வந்து சொன்னாலும்கூட நாம் கேட்க மாட்டோம். அதனால்தான் இறைவன் சொல்ல வருவதில்லை! பரிபக்குவ நிலை ஏற்பட்டு விட்டால், தெருவில் விளையாடிக்கொண்டிருக்கும் சிறுவர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்கிற சொற்களில் கூட நமக்குத் தத்துவப் பொருள் புலப்படத் தொடங்கும்!

எனவே,

நம் உணர்விலே தத்துவப் பொருள் புலப்படுவதற்கு, ஆன்ம பரிபக்குவம் ஒன்றே இன்றியமையாததாய் இருக்கிறது. அந்த ஆன்ம பரிபக்குவம் ஏற்படும் வரையில் இறைவன் நமக்கு எண்ணற்ற பிறவிகளைக் கொடுத்துக் கொண்டே இருப்பார். ஒவ்வொரு நாளும் நம் உள்ளத்தில்

ஆயிரக்கணக்கான ஆசைகள் எழுகின்றன. அல்லவா? அந்த ஆசைகளை அனுபவிப்பதற்காகவே நமக்குப் பிறவிகள் அளிக்கப்படுகின்றன. நாம் எல்லா ஆசைகளையும் ஒரே பிறவியில் அனுபவித்துத் தீர்த்துவிட முடியாது. எந்தெந்த ஆசைகளை நாம் எப்போது அனுபவிக்க வேண்டும் என்று ஈஸ்வரனே நிருணயிக்கிறார். அந்தந்த ஆசைகள் அனுபவிப் பதற்கு ஏற்ற பிறவிகளையும் அவரே தருகிறார்.

ஒரு ஜீவன் வானிலே பறந்துதிரிவதற்கு ஆசைப்படுகிறது என வைத்துக்கொள்வோம். அந்த ஆசை நிறைவேறும் பொருட்டுஅதுபறவையாகப் பிறப்பிக்கப்படுகிறது.ஒருஜீவன் நிறையத் தின்பதற்கும், உழைப்பு இன்றிச் சோம்பிக் கிடப்ப தற்குமே ஆசைப்படுகிறது என வைத்துக்கொள்வோம். அந்த ஆசை நிறைவேறும் பொருட்டு, அது மலைப்பாம்பாகப் பிறப்பிக்கப்படுகிறது. ஒரு ஜீவன் பிறரைத் துன்புறுத்துவ தற்கே ஆசைப்படுகிறது என வைத்துக்கொள்வோம். அந்த ஆசை நிறைவேறும் பொருட்டு அது தேளாகப் பிறப்பிக்கப் படுகிறது. இப்படியே, நம் ஒவ்வொருவருடைய ஆசையும் நிறைவேறுவதற்கு எந்தெந்தப் பிறவி ஏற்றதாய் இருக்கி றதோ, அந்த அந்தப் பிறவியே நமக்கு அளிக்கப்படுகிறது.

எனவே,

ஈஸ்வரன் ஒரு ஜீவனுக்கு உயர்ந்த பிறவியும் இன்னொரு ஜீவனுக்குத் தாழ்ந்த பிறவியும் கொடுப்பது, அந்த ஜீவர் களின் ஆசைப்படிதானே தவிர, அவனுடையஇச்சைப்படிக்கு அல்ல. இந்த உண்மையை அறியாதவர்கள்தாம், அவனைப் பாரபட்சம் உடையவன் என்று குற்றம் சாட்டுகிறார்கள்.

## ஈஸ்வரன் ஒரு காரோட்டியைப் போன்றவன்

ஆசைகளை அனுபவிப்பதற்கே பிறவி அளிக்கப்படுகிறது என்னும்போது, ஒரு குறிப்பிட்ட பிறவியில் நாம் அனுபவிக்க வேண்டிய ஆசைகளின் வரிசைக் கிரமம் எது என்னும் கேள்வி எழுகிறது. அந்த வரிசைக் கிரமத்தையும் ஈஸ்வரனே

தான் நிர்ணயிக்கிறான். எந்தெந்த ஆசைகளை எப்படியெல்லாம் நாம் அனுபவிக்க வேண்டும் என்பதையும், அவனே தான் தீர்மானிக்கிறான். தீர்மானித்து அதற்கு ஏற்ற வகையில் நம்மிடத்தில் உள்ள முக்குணங்களின் வாயிலாக நமது மன மொழி மெய்களை இயக்குகிறான்.

நாம் ஒரு டூரிஸ்ட் பஸ்ஸில் டிக்கெட்டு வாங்கிக்கொண்டு ஏறி உட்காருகிறோம். உட்கார்ந்துவிட்டால் அந்த பஸ் டிரைவர் தனக்கு விருப்பமான ஊர்களுக்கெல்லாம் காரை ஓட்டிச் செல்லுவதில்லை. அப்படி ஓட்டிச் செல்ல அவனுக்கு உரிமை கிடையாது. ஆகையால், நமக்கு விருப்பமான ஊர்களுக்குத்தாம் அவன் ஓட்டிச் செல்லுகிறான்.

ஆனால்,

அந்த ஊர்களுக்குப் போய்ச் சேருவதற்கான பாதைகள் எவை என்பது நமக்குத் தெரியாது. அது அந்த டிரைவருக்குத்தான் தெரியும். ஆகையால், பஸ் செல்ல வேண்டிய பாதைகளைத் தீர்மானிக்கும் உரிமை டிரைவரைச் சேர்ந்தது. அந்த உரிமை நமக்குக் கிடையாது. அவர் எந்தப் பாதைகளில் பஸ்ஸை ஓட்டிச் சென்றாலும், நாம் பேசாமல் பார்த்துக்கொண்டிருக்க வேண்டியதுதான்!

ஈஸ்வரன் இந்த பஸ் டிரைவரைப் போன்றவன். ஆன்மாக்கள் பிரயாணிகளைப் போன்றவர்கள். ஆசைப்படும் உரிமை ஒன்றுதான் ஆன்மாக்களுக்கு உண்டு. அந்த ஆசைகள் நிறைவேறுவதற்கான வழி வகைகளைத் தீர்மானிக்கும் உரிமையும் தகுதியும் ஈஸ்வரனுக்கு மட்டுமே இருக்கிறது. அவன் தீர்மானிக்கும் அந்த வழிவகைகளின் வாயிலாகத் தான் அவன் நம்முடைய ஆசைகளை நிறைவேற்றி வைப்பான்.

நாம் திருவேங்கடப் பெருமானைத் தரிசிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு, ஒரு டூரிஸ்ட் பஸ்ஸில் ஏறி உட்கார்ந்தால் அந்த பஸ், மலைமேல் ஏறிச் செல்லுவதை நம்மால் தவிர்க்க முடியாது. மலைப்பாதையில் பஸ் வளைந்து வளைந்து செல்லும் போது, புதிதாகப் பயணம் செய்பவர்களுக்குப் பயமாகத்

தான் இருக்கிறது. இதே போல, சில ஆசைகளை நமக்கு நிறைவேற்றி வைப்பதற்காக வாழ்க்கையில் பல பயங்கர மான அனுபவங்களின் வாயிலாகத்தான் ஈஸ்வரன் நம்மை அழைத்துச் செல்ல வேண்டியதிருக்கிறது!

## ஈஸ்வரன் ஏன் நம்மைப் பாவம் செய்ய வைக்கிறான்?

எனவே,

நமது வாழ்க்கை அனுபவங்கள் இனிமையாக இருப்பதோ, அல்லது இனிமையற்றவையாக இருப்பதோ நம் ஆசைகளைப் பொறுத்ததேயன்றி, ஈஸ்வரனுடைய இச்சையைப் பொறுத்தது அல்ல. ஈஸ்வரனுடைய பிரியத்தால் நாம் இன்புற்று வாழ்கிறோம், அல்லது ஈஸ்வரனுடைய கோபத்தால் நாம் துன்புற்று வாழ்கிறோம் என்ற பேச்சுக்களுக்கே இடம் இல்லை. ஈஸ்வரனுக்கு எவரிடத்திலும் பிரியமும் கிடையாது. கோபமும் கிடையாது. அவன் எல்லாரிடத்திலும் சமமான கருணை உடையவன். அந்தக் கருணையின் காரணமாகவே, அவன் நம் ஆசைகளை நிறைவேற்றி வைக்கிறான். அந்த ஆசைகளின் காரணமாக நாம் இன்பங்களுக்கும் துன்பங்களுக்கும் ஆளாகி நிற்கிறோம்.

வாழ்க்கையில் நாம் பாவ புண்ணியங்களுக்கு ஆளாவதும் இப்படியேதான்.

அழகான பெண்களைக் கண்டால், அவர்களை எப்படியாவது அடைய வேண்டும் என்று ஆசைப்படுவது, ஒருவனுடைய இயல்பாக இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அந்த ஆசையை அவனுக்கு எப்படி நிறைவேற்றி வைப்பது? பாவமான வழிகளில்தான் நிறைவேற்றி வைக்க வேண்டும். அதனாலேயே, அவனுடைய மன மொழி மெய்களை ஈஸ்வரன் பாவமான காரியங்களில் ஈடுபடுமாறு தூண்டுகிறான். புண்ணியமான அல்லது நேர்மையான காரியங்களில் ஈடுபடுமாறு தூண்டினால், அந்த மனிதனுடைய ஆசை நிறைவேறாது!

ஈஸ்வரன் நம்மைப் புண்ணியங்களிலே மட்டுமே ஈடு படுத்தாமல் பாவ காரியங்களிலும் ஈடுபடுத்துவதற்குஇதுவே காரணமாகும். நம்முடைய மன மொழி மெய்களில் நிகழ் கின்ற பாவ காரியங்களின் விளைவாக, ஓர் ஆசை நிறை வேறும்போது, அந்தப் பாவ காரியங்களுக்கான பொறுப்பை யும் நம்மை அறியாமலேயே நாம் ஏற்றுக்கொண்டு விடு கிறோம்.

இதே போல,

நம்முடைய மன மொழி மெய்களில் நிகழ்கின்ற புண் ணிய காரியங்களின் விளைவாக ஓர் ஆசை நிறைவேறும் போது, அந்தப் புண்ணிய காரியங்களுக்கான பொறுப் பையும் நம்மை அறியாமலே நாம் ஏற்றுக்கொண்டு விடுகிறோம்.

ஒரு வாடகை மோட்டார் வண்டி அகலமான நெடுஞ் சாலையிலும் போகலாம். குறுகலான சந்திலும் போகலாம். இரண்டு பாதைகளிலும் அதை ஓட்டிச் செல்லுபவர் டிரைவரேயானாலும், வண்டியில் இருக்கும் பயணி போய்ச் சேர வேண்டிய இடத்தைக் கருத்தில் கொண்டே, அவர் வண்டி செல்ல வேண்டிய பாதையைத் தீர்மானிக்கிறார். ஆகையால், வண்டியை அகலமான சாலையில் செலுத்தியதற் கான புகழுரையையோ குறுகலான சந்தில் செலுத்தியதற் கான இகழுரையையோ அவர் ஏற்றுக் கொள்வதற்கில்லை, வண்டியை அந்த மாதிரிப் பாதைகளில் அவர் செலுத்துவ தற்குக் காரணமாய் இருந்த பயணியையே அந்த இரண்டும் (அதாவது புகழுரையும் இகழுரையும்) போய்ச் சேரும்.

இதே போல,

நம் மன மொழி மெய்களில் நிகழ்கின்ற நற்செயல்களை யும் தீச்செயல்களையும் இயற்றுபவன் உண்மையில் இறை வனேயானாலும், அந்த நற்செயல்களுக்கான புண்ணியங் களையோ, தீச்செயல்களுக்கான பாவங்களையோ அவன் ஏற்றுக்கொள்வதில்லை. அந்த நற்செயல்களையும் தீச்செயல்

களையும் அவன் நிகழ்த்துவதற்குக் காரணமாய் இருப்பவை நம்முடைய ஆசைகளேயாதலால் அவற்ருல் வரும் புண்ணியங்களையும் பாவங்களையும்கூட நாமேதான் ஏற்றுக்கொள்ள வேண்டியதிருக்கிறது.

இது மட்டும் அல்ல,

நற்செயல்களையும் தீச்செயல்களையும் நம்முடைய குணங்களின் வாயிலாக ஈஸ்வரனே நிகழ்த்துகிருன் என்ருலும் அவையெல்லாம் ஈஸ்வரனுடைய செயல்கள் என்பதாக நாம் உணர்வதில்லை. காரணம், நமக்கு ஈஸ்வரனைத் தெரியாது. நாம் அவனைப் பார்த்ததில்லை. ஈஸ்வரன் ஒருவன் இருப்பதாக வேத ஆகமங்களில் கூறப்பட்டிருப்பதை நாம் மேலெழுந்தவாரியாக ஏற்றுக்கொள்கிருேம். தவிர, உள்ளூற நமக்கு அந்த வாக்கியங்களில் உறுதியான நம்பிக்கை கிடையாது.

நமக்கு நம்மிடத்தில் தான் நம்பிக்கை உண்டு. நாம் என்ருல் யார்? 'நான்' என்னும் உணர்வு வடிவமாய் நமக்கு உள்ளே விளங்கிக்கொண்டிருக்கிற ஆத்மாதான் நம்முடைய உண்மையான ஸ்வரூபம். ஆனல் அந்த ஆத்மாவானது ஸ்வபாவம் எனப்படுகிற குணத்தொகுதியோடு தாதாத்மியப்பட்டுப் போய் இருக்கிறபடியால் அந்தக் குணங்களின் இயக்கத்தை ஆத்மா தன்னுடைய இயக்கமாகவே எண்ணிக்கொள்கிறது. எண்ணிக்கொண்டு, தன்னுடைய மனமொழி மெய்களில் நிகழும் காரியங்கள் அனைத்தையும் தானே செய்ததாக உரிமை கொண்டாடுகிறது!

ஆத்மா இவ்வாறு உரிமை கொண்டாடுவதன் விளைவாகவும் அது புண்ணிய பாவங்களுக்கு ஆளாகிறது.

## கர்த்தா போக்தா காரயதா கர்மபலதாதா

ஒரு காரியத்தைச் செய்பவனுக்குக் கர்த்தா என்று பெயர்.

அந்தக் காரியத்தின் பலனை அனுபவிப்பவனுக்குப் போக்தா என்று பெயர்.

ஒரு காரியத்தைத் தானே செய்யாமல் பிறரைக் கொண்டு செய்விப்பவனுக்குக் காரயதா என்று பெயர்.

காரியத்துக்குக் கர்மா என்று பெயர்.

அந்தக் காரியத்தால் விளையும் பலனுக்குக் கர்மபலம் என்று பெயர்.

ஒருவனுக்கு ஒரு கர்மாவின் பலனைக் கூட்டுவிப்பவனுக்கு அல்லது ஊட்டுவிப்பவனுக்குக் கர்மபலதாதா என்று பெயர்.

இவையெல்லாம் வேதாந்த பரிபாஷைகள். அதாவது குழுக்குறிகள். முதலில் இந்தக் குழுக் குறிகளை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

தவம் செய்துகொண்டிருந்த ஒரு முனிவரின் கழுத்திலே பரீட்சித்து மன்னன் ஒரு செத்த பாம்பைத் தூக்கி மாலையாகப் போட்டான் என்று கூறுகிறது பாகவத புராணம்.

பரீட்சித்து மன்னன் அம்மாதிரியெல்லாம் தவறு செய்யக் கூடியவன் அல்லன். ஆயினும் அந்தச் சமயத்தில் அவன் காட்டிலே வேட்டையாடி விட்டு வந்து கொண்டிருந்தபடியால் அவன் உள்ளத்தில் இரஜோகுணம் மேலோங்கி நின்றிருந்தது. அதனாலேயே அவன் அந்தப் பாவத்தைச் செய்தான். அதாவது, இரஜோகுணத்தின் வாயிலாகப் பரீட்சித்து மன்னனை ஈஸ்வரன் ஒரு தவறான காரியம் செய்ய வைத்தான். எனவே, அந்தப் பாவத்துக்கு ஈஸ்வரன்தான் காரயதா.

எனினும்,

தன்னை அவ்வாறு செய்ய வைத்தவன் ஈஸ்வரன் என்பதாகப் பரீட்சித்து எண்ணவில்லை. தானே அந்தத் தவறைச் செய்ததாகத்தான் அவன் எண்ணினான். அந்த எண்ணமே அந்தப் பாவச் செயலுக்கு அவனைக் கர்த்தா ஆக்கியது.

புண்ணியச் செயலாய் இருந்தாலும் பாவச் செயலாய் இருந்தாலும் ஒவ்வொரு கர்மாவுக்கும் ஒரு பலன் உண்டு.

கர்மாவின் பலன் எப்போதும் கர்த்தாவையே போய்ச்சேரும். கர்த்தாவாய் இருப்பவன் கர்மபலனிலிருந்து தப்பவே முடியாது!

கர்மா, புண்ணியமாய் இருந்தால், அவனுடைய பலனைக் கர்த்தா ஏற்றுக் கொள்வான். ஏனென்றால், புண்ணிய கர்மாவின் பலன் எப்போதும் இன்பகரமாகவே இருக்கும்.

ஆனால்,

பாவ கர்மாவின் பலன் துன்பகரமாய் இருக்கும். அதனால், அந்தப் பலன் வந்து தன்னை ஒட்டாமல் தப்பித்துக் கொள்வதற்கே கர்த்தா முயற்சி செய்வான். கர்த்தாவை அவ்வாறு தப்பித்துக்கொள்ள விடாமல், பாவ கர்மாவின் பலனை ஈஸ்வரன் அவனுக்கு வலுக்கட்டாயமாக ஊட்டுவிப்பான். புண்ணிய கர்மாவின் பலனையும் அவன் அப்படித் தான் ஊட்டுவிப்பான். அவ்வாறு ஊட்டுவிப்பதால் ஈஸ்வரன் கர்மபலதாதா என்று பெயர் பெறுகிறான்.

தான் செய்த பாவ கர்மாவின் பலனிலிருந்து பரீட்சித்து அவ்வாறுதான் தப்ப முயன்றான். அவன் பாம்பு கடித்து இறக்க வேண்டும் என்பதே அந்தக் கர்மாவின் பலன். அதற்காகத் தன்னை எந்த ஒரு பாம்பும் அணுக முடியாதவாறு ஏராளமான பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்துகொண்டு உட்கார்ந்தான். அப்படி இருந்தும் அவனைப் பாம்பு கடித்து விட்டது! அவனும் இறந்துவிட்டான்! அதாவது, தன்னுடைய பாபகர்மாவின் பலனை அவன் அனுபவித்தே தீர்த்தான். அப்படி அனுபவித்த நிலையில் அவன் போக்தா ஆயினான்.

தன்னைக் கர்த்தாவாக எண்ணிக் கொள்கிற ஒருவன், கட்டாயம் போக்தாவாயும் ஆகியே தீரவேண்டும். தன்னைக் கர்த்தாவாக எண்ணாமல் ஈஸ்வரனைக் காரயதாவாக எண்ணுபவன் ஒருநாளும் போக்தா ஆகமாட்டான். அவனைப் பொறுத்தமட்டில் ஈஸ்வரனும் கர்ம பலதாதாவாக இருக்க மாட்டான்.




## ஈஸ்வரன் நம் ஆசைகளை ஏன் நிறைவேற்றுகிறான்?

பரீட்சித்துத் தனக்கு ஏராளமான பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்து கொண்டு உட்கார்ந்தாலும், தன்னுடைய பாபகர்மாவின் பலனை அனுபவிக்காமல் தப்பிவிடமுடியாது என்னும் பேருண்மையையும் அவன் உள்ளூற உணர்ந்திருந்தான். அந்தப் பலன் வந்து தன்னைப் பற்றிவிடுவதற்குள்ளாக (அதாவது தான் பாம்பால் கடிக்கப்பட்டு இறப்பதற்குள்ளாக) அவன் தன் பிறவிப் பிணியை ஒழிப்பதற்கான பரிபக்குவத்தைத் தேடிகொள்வதற்குமுயன்றான். அதற்காகச் சுகப்ரம்மத்திடம் பாகவத புராணம் கேட்டான். புராணம் கேட்டு முடிந்தவுடன் தக்ஷகன் என்ற பாம்பினால் கடிக்கப்பட்டு, அவன் பரம பதத்தை அடைந்தான் என்று அந்தப் பாகவதத்திலேயே கூறப்பட்டிருக்கிறது.

பரமபதத்தை அடைதல் என்பது ஆதிசங்கரரின் அத்துவைத சித்தாந்தத்தின்படி, ஆத்மா தன்னுடைய குணத்தொகுதியின் தாதாத்மியத்திலிருந்து விடுபடுவதே ஆகும். அத்தகைய விடுதலைக்கே முக்தி என்று பெயர்.

முக்தி பெற்ற ஆத்மா, தான் வேறு இறைவன் வேறு என்ற பேத உணர்வை இழந்து, இறைவனோடு இரண்டறக் கலந்து விடுகிறது. அதாவது, தானே கடவுள் நிலையை அடைந்து விடுகிறது!

உலகில் உள்ள எல்லா உயிர்களுமே அத்தகைய கடவுள் நிலையை அடைய வேண்டும் என்பதுதான் ஈஸ்வரனுடைய குறிக்கோள். அந்தக் குறிக்கோள் நிறைவேறுவதற்காகவே அவர் அந்த உயிர்களின் ஆசைகளையெல்லாம் நிறைவேற்றி வைக்கிறார்.

எப்படியென்றால்,

மனிதனுடைய ஆசைகள் நிறைவேற நிறைவேற, அவனுக்கு மேலும் மேலும் புதிய ஆசைகள் தோன்றி, அவனுடைய உள்ளமானது எப்போது பார்த்தாலும் ஏதாவது

ஒரு விதத்தில் அதிருப்தியுற்ற நிலையிலேயே இருந்து கொண்டிருக்கிறது.

இந்த உண்மையை, அவன் இதற்கு முந்தின பலகோடிப் பிறவிகளில் பெற்றுள்ள அனுபவங்களின் முதிர்ச்சியால் என்றாவது ஒரு நாள் உணரத் தொடங்குகிறான்.

அப்படி உணர்ந்தவுடன், இதுவரையிலும் எந்த எந்த உலகியல் இன்பங்களில் அவன் ஆசை கொண்டிருந்தானோ, அவற்றின் மீதெல்லாம் அவனுக்கு இப்போது விரக்தி ஏற்படுகிறது.

இந்த விரக்தி எந்த அளவுக்குத் தீவிரம் அடைகிறதோ, அந்த அளவுக்கு நம்முடைய குணத்தொகுதிகளிலிருந்து நமக்கு விடுதலை கிடைக்கிறது. அந்த விடுதலையே முக்தியாகையால், நமக்கு முக்தியளிப்பதையே தன் தலையாய குறிக்கோளாகக் கொண்ட ஈஸ்வரன், அதற்கு முதற்படியாக, வாழ்க்கையில் நமக்கு விரக்தி ஏற்படுவதற்கான வழிவகைகளையே செய்து கொண்டிருக்கிறார்.

இந்த விரக்தியையே, திருவள்ளுவர், 'வேண்டாமை என்னும் சொல்லால் குறிப்பிடுகிறார். வேண்டாமையைப் போன்ற ஒரு மேலான செல்வம், மூவுலகங்களிலும் கிடையாது என்பது அவரது விழுமிய கருத்து.

## விரக்தியும் வெறுப்பும்

விரக்தி எனப்படுகிற இந்த வேண்டாமை வேறு, வெறுப்பு எனப்படுவது வேறு. வெறுப்பை வடமொழியில் துவேஷம் என்று சொல்லுவார்கள்.

ஒரு மனிதன், தான் சிறு பையனாய் இருந்தபோது, பம்பரம் விளையாடுவதில் பெரிதும் இன்பம் அடைந்து வந்தான். ஆனால் பெரியவனான பிறகு, அவனுக்குப் பம்பர விளையாட்டுச் சுவையற்றதாகிவிட்டது. அதற்குப் பதிலாக, பாவையரிடத்தே அவனுக்குச் சுவை தோன்றலாயிற்று.

இதே போல்,

ஒரு பொருளில் நமக்கு இருந்த சுவை குன்றிவிடுமானுல் அதற்கே விரக்தி என்று பெயர். வெறுப்பு எனப்படுவது, அந்தப் பொருளிடத்தே நாம் கொள்ளுகிற பகைமை உணர்ச்சி.

வேட்கை, பகைமை இந்த இரண்டு உணர்ச்சிகளும், ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்களேப் போன்றவை. அதாவது, வேட்கை மிகுந்த ஓர் உள்ளமானது, எளிதில் பகைமை உணர்ச்சிக்கும் வசப்பட்டுவிடும். பகைமைஉணர்ச்சி எவ்வளவு தீவிரமாக இருக்கிறதோ, அதே அளவுக்கு வேட்கை உணர்ச்சியும் தீவிரமாக எழக்கூடும்.

ஆகையால்,

வேட்கை எனப்படுகிற ஆசையிலிருந்து விடுபட விரும்பு கிறவர்களுக்கு, பகைமை எனப்படுகிற வெறுப்பு உணர்ச்சி ஓர் இடையூறு ஆகும். ஆசையிலிருந்து விடுபட்ட நிலேயே விரக்தி என்பது.

எனவே,

விரக்தி வேறு. நம்மை ஆசையிலிருந்து விடுபடவொட் டாமல் தடுத்துக் கொண்டிருக்கிற வெறுப்பு வேறு.

மனேவியினிடத்தில் ஆசையுள்ள ஒருவன், அவள் வேறெருவனேடு கள்ள நட்புக்கொண்டிருப்பதைக் காண நேர்ந்தால், அவள் மீது கடும் சீற்றம் அடைந்து அவளேக் கொலேகூடச் செய்துவிடுகிருன்!

அதே மனிதன், தன் மனேவியினிடத்தில் ஆசையில்லாத வனுய் இருந்தால் ‘அவள் எக்கேடு கெட்டால் நமக்கு என்ன!’ என்று அவளேவிட்டு விலகிச் சென்று விடுவானே தவிர, கொலே செய்ய மாட்டான்!

கொலே செய்யும் அளவுக்கு அவன் உள்ளத்தில் வெறுப்பு ஏற்பட வேண்டுமானுல், அவள் மீது அந்த அளவுக்கு

அவனுக்கு ஆசையும் இருந்திருக்க வேண்டும். அதாவது ஆசையே வெறுப்பாக உருமாறிக் காட்சி அளிக்கிறது.

எனவே,

ஒரு பொருளின் மீது நமக்குத் தீவிரமான வெறுப்பு ஏற்படுகிறது. அந்தப் பொருளின்மீது நமக்கு உள்ள சுவையும் தீவிரமானதாய் இருக்கிறது என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். பொருளின்மீது உள்ள சுவை குன்றிவிட்டால், அதன் மீது நமக்கு வெறுப்பு ஏற்படாது. விரக்திதான் ஏற்படும் !

சிறுவன் இளைஞன் ஆனபிறகு, பம்பரத்தின் மீது அவனுக்கு விரக்தி ஏற்பட்டதே தவிர, வெறுப்பு ஏற்படவில்லை. விரக்திக்கும் வெறுப்புக்கும் உள்ள இந்த அடிப்படை வேறுபாட்டை நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

## விரக்தியே பரிபக்குவத்தின் அடையாளம்

உலகியல் பொருள்களில் நமக்கு விரக்தி ஏற்பட வேண்டுமே தவிர, வெறுப்பு ஏற்படக்கூடாது. வெறுப்பு ஏற்பட்டால், அது வேட்கையின் மாறுவேடமே தவிர, வேறு அல்ல. அந்த மாறுவேடம் எந்த நேரத்திலும் கலைந்து போய் விடலாம். அப்படிக் கலைந்துபோய் விட்டால், வேட்கை மறுபடியும் தன் சுய வடிவத்தில் வெளிப்பட்டு விளங்கும்.

ஆனால்,

விரக்தி அப்படி அல்ல. ஒரு பொருளின்மீது விரக்தி ஏற்பட்டுவிட்டால், மறுபடியும் எந்தக் காரணத்தை முன்னிட்டும் அதன் மீது நமக்கு வேட்கை பிறக்க மாட்டாது, அந்த வேட்கையிலிருந்து நாம் முற்றிலும் விடுபட்டு விட்டோம் என்பதே அதன் பொருள்.

பையனாய் இருக்கும்போது, ஒருவனுக்குப் பம்பரத்தின் மீது வேட்கை இருந்தது. இளைஞனான பிறகு அவனுக்குப் பம்பரத்தின் மீது விரக்தி பிறந்தது. பையனுடைய உள்ளத்தைக் காட்டிலும் இளைஞனுடைய உள்ளமானது, அவனது

வயதுக்கு ஏற்ற பரிபக்குவத்தை அடைந்திருப்பதே அதற்குக் காரணமாகும்.

எனவே,

விரக்தி என்பது, ஒருவர் அடைந்துள்ள பரிபக்குவத்தின் அடையாளம் என்று தெரிகிறது. அல்லவா ?

இது மட்டும் அல்ல,

பம்பரத்தின் மீது விரக்தி அடைந்த இளைஞன், ஒரு மெல்லியலாளின் மீது வேட்கை கொள்கிறான். அதன் பொருள் என்ன ?

பம்பரம் விளையாடுகிற பையனாய் இருந்தபோது, அவனுடைய நாட்டம் பாவையரை நாடிச் சென்றதில்லை. காரணம்,பாவையரை நாடுவதற்கான பரிபக்குவம்,அவனது உடலிலும் உள்ளத்திலும் அப்போது எற்பட்டிருக்கவில்லை. பரிபக்குவம் ஏற்பட்டவுடன், அந்த நாட்டமும் அவனுக்கு இயல்பாகவே ஏற்படத் தொடங்கிவிட்டது.

உலகியல் இன்பங்களில் நாட்டம் கொள்பவர்கள், அந்த இளம் சிறுவனைப்போன்றவர்களே. பம்பர விளையாட்டுக்கு மேற்பட்ட ஓர் இன்பம் இருப்பது இளஞ்சிறுவனுக்கு தெரியாதது போல், உலகியல் இன்பங்களுக்கு மேற்பட்ட ஓர் இன்பம் இருப்பது நம் போன்ற சாதாரண மனிதர்களுக்குத் தெரியாது !

சிறுவன் இளைஞன் ஆனவுடன், பாவையர் இன்பம் என ஒன்று இருப்பதாக அந்த இளைஞனுக்குத் தெரிவது போல,

சாதாரண மனிதர்களாகிய நமக்கு ஓரளவு சன்ம பரிபக்குவம் ஏற்பட்டவுடன், இறைவனை அடைதலாகிய பேரின்பம் என ஒன்று இருப்பதாக நாம் இயல்பாகவே மிக உணரத் தொடங்குகிறோம் !

அதுவரை,உலகியல் விவகாரங்களிலேயே இடைவிடாது ஈடுபட்டிருந்த நம் உள்ளமானது, அப்போது ஆன்மிகத் துறையில் நாட்டம் கொள்ளத் தொடங்குகிறது.

## ஆத்மாவும் சிதாபாசனும்

இந்தக் கட்டத்தில், பாவம் என்ருல் என்ன—புண்ணியம் என்ருல் என்ன என்பதைப்பற்றி, நாம் சிறிது தெரிந்து கொள்ள வேண்டும்.

ஆத்மாவுக்குத் தன்னுடைய குணத்தொகுதிகளோடு உள்ள தாதாத்மியத்தை மேலும் மேலும் வலுவடையச் செய்வது எதுவோ, அதுவே பாவம் எனப்படுவது.

ஆத்மாவுக்குத் தன்னுடைய குணத் தொகுதியோ உள்ள தாதாத்மியத்தை மேலும் மேலும் பலவீனப்படுத்து வது எதுவோ, அதுவே புண்ணியம் எனப்படுவது.

நாம் ஒரு கண்ணுடியின் எதிரே நிற்பதாக வைத்துக் கொள்வோம். கண்ணுடியில் நம்முடைய முகத்தின் பிரதி பிம்பம் காணப்படுகிறது. அந்தப் பிரதிபிம்பத்தைப் பார்க் கும்போது, நம்மையே நாம் பார்த்துக்கொள்வது போன்ற ஒரு மயக்க உணர்வு நமக்கு ஏற்படுகிறது.

ஆம். அது மயக்க உணர்வுதான். ஏனென்ருல், கண் ணுடியில் காணப்படுவது நம்முடைய உண்மையான முகம் அல்ல. முகத்தின் சாயையே !

ஒவ்வொரு மனிதனுக்கும், தன்னுடைய முகத்தைக் கண்ணுடியில் பார்த்துக் கொள்வதில் ஒருபிரியம் இருக்கிறது. காரணம், கண்ணுடியில் பார்க்கும்போது தன் முகம் மிகவும் அழகாய் இருப்பது போன்று அவனுக்குத் தோன்றுகிறது. தன்னுடைய அழகை, தானே இரசிப்பதற்காகவே அவன் கண்ணுடியைப் பார்க்கிருன்.

அப்படி இரசிக்கும்போது, ஒருவன் தன்னேயும் மறந்து அந்த இரசனேயில் மூழ்கி விடுகிருன் என்று வைத்துக்கொள் வோம். அந்தச் சமயத்தில் அவனுக்குத் தன்னுடைய உண்மையான முகம் வேறு—கண்ணுடியில் தெரிகின்ற பிரதி பிம்பம் வேறு என்ற உணர்வே இல்லாமல் போய்விடும். அப்படி ஆகிவிட்டால், அவன் தனக்கென்று ஒரு முகம்

இருப்பதை மறந்து, கண்ணுடியில் தெரிவதுதான் தன்னு டைய உண்மையான முகம் என்று நம்பும் அளவுக்கு வந்து விடுவான்!

உலகில் யாராவது அப்படி நம்புவார்களா என்று கேட்காதீர்கள். நிலைக்கண்ணுடியையேஒருவன் அல்லும் பகலும் நெடுங்காலம் பார்த்துக் கொண்டிருப்பானுகில்,அந்த மாதிரி நிலையை அவன் அடைந்து விடுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஆனுல், அப்படி அடையும்போது, அவன் தன் முழுமையான சுய அறிவுடன் இருக்க மாட்டான். ஹிப்னுசிஸ் (Hypnosis) என்னும் செயற்கை உறக்கத்தைப் போன்ற ஒரு மயக்க நிலையிலேயே அவன் அப்போது இருந்துகொண்டிருப்பான்.

நம் ஒவ்வொருவரிடமும் உள்ள ஸ்வாபம் என்னும் குணத்தொகுதியானது,ஒருநிலைக் கண்ணுடியைப் போன்றது. அந்தக் கண்ணுடியில், நம்முடைய ஆத்மாவின் பிரதிபிம்பம் ஒன்று காட்சியளிக்கிறது. அந்தப் பிரதிபிம்பத்துக்குச் சிதாபாஸன் என்று பெயர்.

சித் ஆபாஸன், சிதாபாஸன். சித் என்ருல், அறிவுப் பொருள். அதாவது, ஆத்மா. ஆபாஸம் என்ருல், நிழல் அல்லது சாயை. எனவே, சிதாபாஸன் என்ருல் ஆன்மாவின் சாயை எனப் பொருள்படும்.

ஆத்மாவானது உலகம் தோன்றிய நாளிலிருந்து தன்னுடைய பிரதிபிம்பமாகிய இந்தச் சிதாபாஸனை இடையருது உற்று நோக்கிக் கொண்டிருக்கிறது.

அதன் விளைவாக,

தனக்கென்று ஒரு முகம் இருப்பதை மறந்து, நிலைக் கண்ணுடியில் தெரிவதே தன்னுடைய உண்மையான முகம் என்று எண்ணிக்கொள்கிற மயக்க உணர்வினைப் போல, ஆத்மாவும் தனக்கென்று ஒரு ஸ்வரூபம் இருப்பதை மறந்து நிற்கிறது.

தான் தாதாத்மியப்பட்டுள்ள குணத் தொகுதியிலே காட்சியளிக்கிற சிதாபாஸனையே தன்னுடைய உண்மையான ஸ்வரூபமாக எண்ணிக்கொள்கிறது.

## அபிமானம் என்னும் அவல நிலை

இந்த மாதிரியான மயக்க உணர்வு ஆத்மாவுக்கு இன்று நேற்று ஏற்பட்டது அல்ல. பலகோடிப் பிறவிகளாக இந்த உணர்வு அதனிடத்தே வலுவடைந்து வந்திருக்கிறது. நாம் எண்ணுகிற ஒவ்வோர் எண்ணமும், நாம் பேசுகிற ஒவ்வொரு பேச்சும், நாம் செய்கின்ற ஒவ்வொரு செயலும், இந்த மயக்க உணர்வின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

நாம் நீர்க் கரையிலே நிற்கும்போது, தண்ணீருக்குள்ளே நம்முடைய பிரதிபிம்பம் தெரிகிறது. அப்போது ஒரு சிறு காற்று அடிப்பதாலோ அல்லது வேறு காரணங்களாலோ தண்ணீரில் ஏதாவது ஒரு கலக்கம் ஏற்படுமானால், அதிலே தெரிகிற நமது பிரதிபிம்பமும் கலக்கம் அடைகிறது. அல்லவா?

இதே போல,

உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களின் நிமித்தமாக, ஈஸ்வரன் மூலப் பிரகிருதியைக் கலக்கும்போது,

அந்த மூலப் பிரகிருதியின் ஒரு சின்னஞ் சிறு அம்சமாய் இருப்பதும், நம்முடைய ஆத்மாவோடு தாதாத்மியப்பட்டிருப்பதுமாகிய, நமது ஸ்வாபதிலும் கலக்கம் ஏற்படுகிறது.

இதன் விளைவாக,

அந்த ஸ்வாபத்தில் பிரதிபலித்து இருக்கிற சிதாபாஸனும் கலக்கம் அடைகிறான்.

அப்போது,

சிதாபாஸனையே தன்னுடைய உண்மையான ஸ்வருபம் என்று எண்ணிக் கொண்டிருக்கிற காரணத்தால் ஆத்மாவானது, அந்தச் சிதாபாஸனது கலக்கத்தைத் தன்னுடைய கலக்கமாக ஏற்றுக்கொள்கிறது.

இது,

கண்ணாடியில் தன் முகத்தைப் பார்க்கும் ஒருவன், அந்தக் கண்ணாடியில் ஏற்பட்டுள்ள வெடிப்பைத் தன்னுடைய முகத்தில் ஏற்பட்ட வெடிப்பாக எண்ணிக் கொள்வது போன்ற ஒரு பேதமைச் செயலே அன்றி, வேறு அல்ல.

சூரியன், நமது பூமண்டலத்தைக் காட்டிலும் மிகமிகப் பெரியது. அப்படி இருந்தும், ஒரு சிறு புல்லின் நுனியில் ஒட்டிக்கொண்டிருக்கிற பனித்துளியிலே அது பிரதிபலிக்கிறது.

சூரியனைப்போன்றது நமது ஆத்மா. பனித்துளிகளைப் போன்றவை, ஸ்வபாவங்கள் எனப்படுகிற குணத்தொகுதிகள். அந்தப் பனித் துளிகளிலே காணப்படுகிற சூரியப் பிரதிபிம்பங்களைப் போன்றவர்கள் சிதாபாஸர்கள்.

இந்த உவமையைக் கொண்டே, ஆத்மாவுக்கும் சிதாபாஸனுக்கும் உள்ள தாரதம்யத்தை நாம் ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம்.

நமது மாபெரும் பூமண்டலத்தைக் காட்டிலும் மிகமிகப் பெரிதாகிய சூரியன், ஒரு சின்னஞ்சிறு பனித்துளிக்குள்ளே அடைப்பட்டுக் காட்சியளிப்பது போல,

இறைவன் வேறு—தான் வேறு அல்லாததாகிய ஆத்மாவும்,

நமது குணத்தொகுதியின் நிலைக்கலமாகிய இந்த எண் சாண் உடம்பினுள்ளே அடைபட்டுக் கிடப்பது போல் காட்சி அளிக்கிறது.

நம்முடைய உடம்பிலும் மனத்திலும் அடைபட்டுக் கிடப்பது, சிதாபாஸனே அன்றி, ஆத்மா அல்ல. எனினும், அந்தச் சிதாபாஸனையே தன்னுடைய உண்மையான ஸ்வரூபம் என்று எண்ணிக்கொண்டிருப்பதன்காரணமாக ஆத்மாவானது, அந்த உடம்பிலும் மனத்திலுமே தன்னுடைய வாழ்வு அனைத்தும் அடங்கியிருப்பது போன்ற ஒரு மயக்க உணர்வோடு வாழ்ந்து கொண்டிருக்கிறது.

அதாவது,

உடம்பு நலமாக இருந்தால் தானும் நலமாயிருப்பதாகவும், உடம்பு நோய்வாய்ப்பட்டால் தானும் நோய்வாய்ப்பட்டது போலவும் அது எண்ணிக் கொள்கிறது.

உடம்பு வேறு—ஆத்மா வேறு என்னும் வேறுபாட்டை உணரமாட்டாத நம்முடைய இந்த அவல நிலைக்கே, உடற்பற்று அல்லது தேகாபிமானம் என்று பெயர்.

தான் அல்லாததைத் தானுகவும், தன்னுடையது அல்லாததைத் தன்னுடையதாகவும் எண்ணிக்கொள்கிற தவருன உணர்வுக்கே அபிமானம் என்று பெயர்.

ஆத்மாவுக்குச் சரீரத்தில் உள்ள அபிமானத்தைப் போலவே, மனத்திலும் அபிமானம் உண்டு. புத்தியிலும் அபிமானம் உண்டு. அகங்காரத்திலும் அபிமானம் உண்டு.

இந்த அபிமானங்கள் அனைத்திலிருந்தும் விடுபட்டால் அன்றி, ஜீவர்களுக்குக் கதிமோட்சமே கிடையாது!

## சில இன்றியமையாத கற்பனைகள்

இப்போது, இன்னொரு உண்மையையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

உலகப் படைப்பின் காரணமாக ஈஸ்வரன் மூலப் பிரகிருதியைக் கலக்கும்போது, அவ்வாறு கலக்குண்ட மூலப் பிரகிருதியிலே காட்சியளிக்கும் குணத்தொகுதிகளில் வியாபித்துள்ள ஈஸ்வராம்சங்களே ஆன்மாக்கள் ஆவர் என்னும் செய்தியை நாம் முன்னமேயே அறிந்துள்ளோம்.

குணத்தொகுதிகள் எண்ணற்றவையாய் இருப்பதால், ஆன்மாக்களும் எண்ணற்றவர்களே என்றுதான் பொதுவாகப் பேசப்படுவது வழக்கம். ஆனுல் ஆதிசங்கரரின் அத்துவைத சித்தாந்தப்படி அது சரியல்ல.

ஆன்மாக்கள் எண்ணற்றவர்கள் என்பதை ஒப்புக் கொண்டால், மூலப்பிரகிருதியில் தோன்றிய குணத்

தொகுதிகள், ஈஸ்வரனைக் கூறுபோட்டுவிட்டன என்பதே அதன் பொருள் ஆகும். ஈஸ்வரனை அவ்வாறு கூறுபோடும் சக்தி நமது குணத்தொகுதிகளுக்கோ, அவற்றின் தாயாகிய மூலப்பிரகிருதிக்கோ கிடையவே கிடையாது.

வானவெளியை, மேடம் இடபம் முதலிய பன்னிரண்டு இராசிகளாக, வானநூல் வல்லார் பிரித்துப் பேசுகிறார்கள். ஆனால் உண்மையிலேயே, அத்தகைய பிரிவினைக்கோடுகள் ஏதாவது வானவெளியில் இருக்கின்றனவா?

பூகோள நூல்களில் பேசப்படுகிற கடகரேகை, மகர ரேகை, பூமத்திய ரேகை ஆகிய இவையெல்லாம், எப்படி வெறும் கற்பனைக்கோடுகளோ, அதுபோல,மேடம், இடம் முதலிய இராசி மண்டலங்களும், வானவெளியிலே செய்யப்படுகிற வெறும் கற்பனைப் பிரிவினைகளே ஆகும்.

வானவெளியை எவராலும் கூறுபோட முடியாது. அப்படியே ஈஸ்வரனையும் நம்முடைய குணத் தொகுதிகளால் கூறுபோட முடியாது.

இருந்தாலும்,

சூரியன் கிழக்கே உதிக்கிறான், மேற்கே மறைகிறான் என்னும் போது, கிழக்கு மேற்கு என்னும் திசைகள் வான வெளியை இரண்டாகக் கூறுபோடுவதுபோல் தோன்றுகிறது அல்லவா? உண்மையில் கிழக்கு எங்கே இருக்கிறது? மேற்கு எங்கே இருக்கிறது என்பதை, எவராவது அறுதியிட்டுக் கூறமுடியுமா?

எடுத்துக்காட்டாக,

காரைக்குடி எந்தக் திசையில் இருக்கிறது?

அது திருப்பத்தூருக்குக் கிழக்கே இருக்கிறது என்கிறோம். அப்படியானால், காரைக்குடி இருக்கும் இடம் தான் கிழக்குத் திசை என்று கூறிவிடலாமா?

அல்லது,

காரைக்குடியானது தேவகோட்டைக்கு மேற்கே இருக்கிறது என்று சொல்லுகிறோம். ஆதலால், காரைக்குடி இருக்கும் இடம்தான் மேற்குத்திசை என முடிவு கட்டலாமா?

இரண்டும் கூறமுடியாது.

இன்ன திசை இன்ன இடத்தில்தான் இருக்கிறது என்று எவராலும் சுட்டிக்காட்ட இயலாது. சற்றுச் சிந்தித்துப் பார்த்தால்,இராசி மண்டலங்களைப்போல, கிழக்கு மேற்கு, தெற்கு வடக்கு என்னும் திசைகளும் வெறும் கற்பனைப் பொருள்களே என்பது தெளிவாக விளங்கும்.

இருந்தாலும்,

உலகியல் வாழ்க்கைக்கு அவை இன்றியமையாத கற்பனைகள்.

அதே போல,

குணங்களாலும் குணத் தொகுதிகளாலும் ஈஸ்வரன் கூறுபோடப்படுவதாகக் கருதுவதும் உலகியல் வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாத கற்பனைகளே!

## சந்திரனும் சங்கீதமும்

உண்மையில், எவராலும் கூறுபோடப்படாத ஒரு முழு முதற்பொருள் ஈஸ்வரன். இதை இன்னொரு உபமானத்தாலும் நாம் விளக்கலாம்.

ஒரு சங்கீத வித்வான் மேடையில் அமர்ந்து பாடுகிறார். கச்சேரி துவக்கம் ஆகும்போது சபையில் ஐம்பது பேர்தான் இருந்தார்கள். ஒரு மணி நேரம் ஆனபிறகு அங்கு இருநூறுபேர் இருந்தார்கள். மூன்று மணி நேரம் ஆகிக் கச்சேரி முடிவடையும் சமயத்தில் சபையோரின் எண்ணிக்கை ஆயிரமாக உயர்ந்து விட்டது என்று வைத்துக் கொள்வோம்.

அப்படியானால்,

'கச்சேரி துவங்கும்போது, சபையில் இருந்த ஒவ்வொரு வருக்கும் அந்த வித்வானுடைய சங்கீதத்தில் ஐம்பதில் ஒரு பங்கு கிடைத்துக் கொண்டிருந்தது. ஒரு மணி நேரம் ஆன பிறகு அவர்கள் ஒவ்வொருவருக்கும் இருநூறில் ஒரு பங்கு கிடைக்கலாயிற்று. ஆனால் மூன்று மணிநேரம் ஆகும் சமயத் தில் அது ஆயிரத்தில் ஒரு பங்காகக் குறைந்துபோய்விட்டது, என்று கூறலாமா ?

சபையில் ஐம்பது பேர் இருந்தாலும் ஐயாயிரம் பேர் இருந்தாலும் அந்த வித்வான் அளிக்கின்ற இசையிலிருந்து, அவர்கள் ஒவ்வொருவருக்கும் சமபங்கே கிடைக்கிறது. சபையோரின் எண்ணிக்கை கூடுவதனால் எவருடைய பங்கும் குறைந்துபோவதில்லை. சபையோரின் எண்ணிக்கை குறை வதனால் எவருடைய பங்கும் கூடுதல் ஆகி விடுவதில்லை. காரணம், சங்கீதத்தைப் பங்குபோட முடியாது. அதைக் கேட்டு மகிழும் ஒவ்வொருவருக்கும் அதனுடைய முழுமை யான அளவிலேயே அது கிடைக்கிறது.

நாம் காதால் கேட்கிற சங்கீதத்தையே பங்குபோட முடியாது என்றால், காது முதலிய பொறிகளுக்கும் புலன் களுக்கும் மனத்துக்கும் எட்டாத இறைவனையா பங்குபோட முடியும் ?

இறைவன் ஒவ்வோர் அணுவிலும் இருக்கிறான் என்பது உண்மையே. ஆனால், அந்த ஒவ்வோர் அணுவின் உள்ளே யும் அவன் தன் முழுமையான ஸ்வரூபத்தோடு இருக்கிறான். அவன் இருக்கும் ஓர் அணுவை எடுத்து இரண்டாகப் பிளந்து பார்த்தால், அந்தப் பிளவுகள் ஒவ்வொன்றிலும்கூட அவன் தன் முழுமையான ஸ்வரூபத்தோடுதான் இருப்பான் ;

வானத்திலே முழு நிலா காட்சி அளிக்கிறது. அதை ஒருவர் பார்த்தால் அந்த முழுக்காட்சியும் தெரிகிறது. இரண்டு பேர் பார்த்தால் ஒவ்வொருவருக்கும் அரை அரைக் காட்சி தெரிகிறது, நாலுபேர் பார்த்தால் கால் கால் காட்சி தெரிகிறது, இப்படியே, பார்க்கிறவர்களின்

எண்ணிக்கை கூடுதல் ஆகஆக அவர்கள் ஒவ்வொருவருக்கும் கிடைக்கிற காட்சியின் அளவு குறைந்து கொண்டே வருகிறது என்று எவராவது கூறமுடியுமா ?

சந்திரனுடைய காட்சி அதைப் பார்ப்பவர்களின் கண் களிலெல்லாம் வியாபித்து இருக்கிறது. சங்கீதத்தின் இனிமை, அதைக் கேட்பவர்களின் காதுகளிலெல்லாம் வியாபித்து இருக்கிறது.

இருந்தாலும்,

பார்ப்பவர்களின் கண்களினுல் சந்திரனைக் கூறுபோட இயலாது.

கேட்பவர்களின் காதுகளினுல் சங்கீதத்தைக் கூறுபோட இயலாது.

இதுபோல, மூலப்பிரகிருதியின் முக்குணங்களினுலோ அல்லது குணத்தொகுதிகளினுலோ, அவற்றை வியாபித் திருக்கும் ஈஸ்வரனைக் கூறுபோட முடியாது.

ஆனுலும்,

கிரகண காலத்தில் பூமியின் நிழலினுல் பாதி மறைக்கப் பட்டிருக்கும் சந்திரன், இராகு என்ற பாம்பினுல் பாதி விழுங்கப்பட்டது போன்று காட்சியளிக்கிறது அல்லவா ?

அவ்வாறே,

குணங்களாலும் குணத்தொகுதிகளாலும், ஈஸ்வரன் கூறுபோடப்பட்டவனைப் போன்று காட்சியளிக்கிருன் !

இந்த அடிப்படை உண்மையை நாம் ஒரு நாளும் மறந்துவிடக் கூடாது.

## உலகிலே பெரியோர்கள் எப்படி வாழ்கிருர்கள் ?

இந்த முறையில் பார்க்கும்போது,

பிரும்ம விஷ்ணு உருத்திரன் போன்ற தேவர்களாயினும் சரியே,

மற்றைய நம்போன்ற (அல்லது நம்மினும் இழிவான) பிறவிகளுடையவர்களாயினும் சரியே,

எந்த ஓர் ஆன்மாவையுமே நாம் ஈஸ்வரனுடைய அம்சம் என்று கூறக்கூடாது.

ஏனென்றால்,

அம்சம் என்றால் கூறு என்பது பொருள். கூறுபோட முடியாத ஒரு முழுமையான பொருளுக்கு, அம்சம், உறுப்புப் போன்ற கூறுகள் இருக்க முடியாது.

எனவே,

ஆன்மாக்கள் ஈஸ்வரனுடைய அம்சம் என்று சொல்லுவது உண்மையில் ஓர் ஆபத்தான பேச்சேயன்றி, வேறு அல்ல !

அப்படியானால் ஆன்மாக்களை வேறு எப்படித்தான் சொல்லுவது ?

உலகில் உள்ள ஒவ்வொரு ஆன்மாவையும் (அது பறவையாய் இருந்தாலும், விலங்காய் இருந்தாலும், பூச்சியாய் இருந்தாலும், புழுவாய் இருந்தாலும்)முழுமையான ஈஸ்வர சொரூபவம் என்றே நாம் சொல்லவேண்டும், ஆன்மா வேறு —இறைவன் வேறு அல்ல என்பதே சங்கர அத்வைதத்தின் சாரமான கோட்பாடு.

இறைவன் ஒருவனே அன்றி, இரண்டாவது இறைவன் இல்லை.

ஆகையால்,

ஆன்மாவும் ஒன்றேயன்றி உலகில் இரண்டாவது ஆன்மா கிடையாது.

இருந்தாலும் குணத்தொகுதிகளில் உள்ள வேறுபாடுகளின் காரணமாக ஆன்மாக்களும் பலப்பல இருப்பது போன்று ஒரு மயக்க உணர்வு உண்டாகிறது.

உலகியல் விவகாரங்களுக்கு இந்த மயக்க உணர்வு இன்றியமையாதது என்பதைச் சங்கரர் ஏற்றுக்கொள்கிறார்.

அப்படியானால், அந்த மயக்க உணர்விலிருந்து விடுபட்டவர்கள் அதற்கு அப்புறம் உலகியல் விவகாரங்களில் ஈடுபடுவதற்கே தகுதியற்றவர்கள் ஆகிவிடுவார்களா என்னும் கேள்வி எழுகிறது.

அவர்கள் தகுதியற்றவர்கள் ஆகிவிடுவதும், தகுதியுடையவர்களாய் இருப்பதும், அவரவர்களது விருப்பத்தைப் பொறுத்ததேயன்றி வேறு அல்ல.

அதாவது,

உலகியல் விவகாரங்களில் ஈடுபடுவதற்கு அவர்களுக்கு விருப்பம் இல்லையென்றால், அவர்கள் எங்கேயாவது ஒரு தனி இடத்தில் போய்ச் சமாதியில் உட்கார்ந்துவிடலாம். அமலாபுரம் பாலயோகி இப்போது இப்படித்தான் உட்கார்ந்திருக்கிறார்!

அல்லது,

காற்றில் அடித்துச் செல்லப்பட்ட சருகைப்போல, உலகத்திலே அவர்கள் எந்த ஒரு குறிக்கோளும் இன்றி உலாவித் திரியலாம். திருவண்ணாமலையில் இருந்த சேஷாத்திரி ஸ்வாமிகள் அப்படித்தான் உலாவித் திரிந்தார்.

உலகியல் விவகாரங்களில் ஈடுபடுவதற்கு அவர்களுக்கு விருப்பம் இருந்தது என்றால், வெளிப்பார்வைக்கு மற்ற மனிதர்களைப்போல் தாமும் மயக்க உணர்வில் மூழ்கிக் கிடப்பது மாதிரி நடித்துக் கொண்டு, உள்ளூரத் தம்முடைய மெய்யுணர்விலிருந்து சிறிதும் நழுவாமலே அவர்கள் வாழ்ந்து வரலாம். பண்டைக் காலத்தில் சீதையின் தந்தையாகிய ஜனக மன்னர் அப்படித்தான் வாழ்ந்து வந்தாராம்!

## பாவம் எது? புண்ணியம் எது?

மயக்க உணர்விலிருந்து விடுபட விரும்புகிற மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பது அடுத்த கேள்வி.

பல கோடிப் பிறவிகளில் தொடர்ந்து வருகிற பழக்க வாசனையால், அவன் ஆத்மாவே தன்னுடைய உண்மையான ஸ்வரூபம் என்பதை உணராமல், சிதாபாஸனே தன்னுடைய உண்மையான ஸ்வரூபம் என்று எண்ணிக்கொண்டிருப்பான்.

சூரியன் ஒன்றுதான் என்றாலும் பனித்துளிகளிலே பிரதி பலிக்கிற அதன் பிரதிபிம்பங்கள் எண்ணற்றவையாய் இருப்பதுபோல,

ஆத்மா ஒன்றுதான் என்றாலும், மூலப் பிரகிருதியின் குணத்தொகுதிகளிலே பிரதிபலிக்கிற சிதாபாஸர்கள் எண்ணற்றவர்களாய் இருப்பார்கள்.

அந்தச் சிதாபாஸர்களில் ஒருவனாகத் தன்னை எண்ணிக் கொண்டிருக்கிற மனிதன், மற்ற மனிதர்களையும் சிதாபாஸர் களாகத்தாம் எண்ணுவானேயன்றி ஆத்ம ஸ்வரூபர்களாக எண்ணமாட்டான்.

தன்னை ஆத்ம ஸ்வரூபனாக அறிகிறவன் எவனோ, அவனே மற்றவர்களையும் ஆத்ம ஸ்வரூபர்களாக அறிவான்.

அப்படி அறிந்து விட்டால் ஆத்மா ஒன்றே, ஆகையால், உலகில் உள்ள எல்லா மனிதர்களிடத்திலும், மற்ற ஜீவராசி களிடத்திலும், தன்னுடைய ஆத்மாவே விளங்கிக் கொண் டிருக்கிறது என்னும் உண்மையை அவன் உணர்ந்தவன் ஆவான்.

அவ்வாறு உணர்ந்து விட்ட ஒருவனுக்கு, தான் வேறு—மற்ற மனிதர்கள் வேறு, தான் வேறு—மற்ற ஜீவராசிகள் வேறு என்னும் பேத மனப்பான்மை இருக்கவே இருக்காது.

அவன் உலகில் உள்ள எல்லாரையும் தானாகவே கருது வான். தன்னையே மற்ற எல்லாராகவும் கருதுவான்.

மயக்க உணர்விலிருந்து விடுபட விரும்புகிற மனிதன், இத்தகைய ஒரு பேதமற்ற மனப்பான்மையைத் தன் னிடத்தே வளர்த்துக் கொள்வதற்கு முயற்சி செய்ய வேண்டும். எப்படி?

பிறருடைய துன்பத்தைத் தன்னுடைய துன்பமாகவும், பிறருடைய இன்பத்தைத் தன்னுடைய இன்பமாகவும் அவன் பாவித்துப் பழக வேண்டும்.

இப்போது நாமெல்லாம் நம்முடைய சொந்த இன்ப துன்பங்களில்தாம் அக்கறை உடையவர்களாய் இருக் கிறோமே அன்றி, பிறருடைய இன்ப துன்பங்களில் அக்கறை உடையவர்களாய் இருப்பதில்லை. இத்தகைய மன நிலைக்கு, சுயநலப்பான்மை என்று பெயர்.

இந்தச் சுயநலப்பான்மை நம்மிடத்தில் எவ்வளவுக்கு எவ்வளவு தீவிரமாய் இருக்கிறதோ,

அவ்வளவுக்கு அவ்வளவு,

நம்முடைய ஆத்மாவுக்கும், அதனால் வியாபிக்கப் பட்டுள்ள குணத் தொகுதிக்கும் உள்ள தாதாத்மியம் வலுவடைந்து விளங்கும்.

அந்தத் தாதாத்மியத்தை அவ்வாறு வலுவடையச் செய் வது எதுவோ, அதுவே பாவம் எனப்படுவது என்பதை நாம் முன்னமேயே பார்த்தோம்.

சுயநலப்பான்மைக்கு நேர் எதிரிடையான மனநிலை ஒன்று இருக்கிறது. அதுதான் பொதுநலப்பான்மை அல்லது பரோபகார்ரச் சிந்தை என்று சொல்லப்படுவது.

ஒருவர் தன்னுடைய சொந்த இன்ப துன்பங்களில் அக்கறை இல்லாதவராய், பிறருடைய இன்ப துன்பங்களில் மட்டுமே அக்கறை உடையவராய் இருப்பாரானால், அவரே பரோபகாரச் சிந்தையாளர்.

அப்படிப்பட்டவர்கள் தங்களுக்காக உயிர் வாழ்வதில்லை. பிறருக்காகவே அவர்கள் வாழ்கிறார்கள். மகான் கௌதம புத்தர் அவ்வாறு வாழ்ந்தவர். அதனாலேயே, ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகிய மணிமேகலை, அவரைத் 'தனக் கென வாழாப் பிறர்க்குரியாளன்' என்று போற்றுகிறது!

நாம் எல்லாரும் எடுத்த எடுப்பிலேயே கௌதம புத்தர் ஆகிவிட முடியாது. இருந்தாலும், நம்முடைய சுயநலப் பான்மையை ஒழிப்பதற்கும், பரோபகாரச் சிந்தையை வளர்ப்பதற்கும், நாம் இடையருது முயற்சி செய்து கொண் டிருக்க வேண்டும்.

இந்தப் பரோபகாரச் சிந்தை நம்மிடத்தில் எவ்வள வுக்கு எவ்வளவு வளர்ச்சி அடைகிறதோ,

அவ்வளவுக்கு அவ்வளவு,

நம்முடைய ஆத்மாவுக்கும், அதனுல் வியாபிக்கப் பட்டுள்ள குணத் தொகுதிக்கும் உள்ள தாதாத்மியம், நாளுக்கு நாள் பலவீனப்பட்டுக்கொண்டே வரும்.

அந்தத் தாதாத்மியத்தை அவ்வாறு பலவீனம் அடையச் செய்வது எதுவோ, அதுவே புண்ணியம் எனப்படுவது என் பதை, நாம் முன்னமேயே கண்டுள்ளோம்.

## இரு வகையான வாசனைகள்

எனவே,

நம்முடைய குணத் தொகுதிகளிலிருந்து விடுதலை பெற்று, நாம் கடவுள் நிலையை அடைய வேண்டும் என்று ஆசைப்பட்டால்,

நமது மனத்தை ஒருபோதும் பாவமான வழிகளில் செல்லவிடக் கூடாது. அதை எப்போதும் புண்ணியமான வழிகளிலேயே செலுத்திக் கொண்டிருக்க வேண்டும்.

ஒரு மனிதனுடைய மனம் என்பது, அவனது ஆத்மா வினுல் வியாபிக்கப்பட்ட குணத்தொகுதியிலிருந்து உரு வாகிய ஒரு கருவியே தவிர, வேறு அல்ல.

அந்தக் குணத் தொகுதியிலிருந்து அகங்காரம், புத்தி, ஐம்புலன்கள், ஐம்பொறிகள், இவற்றிற்கெல்லாம் நிலைக்கள மாக விளங்குகிற உடம்பு—இப்படிப் பல கருவிகள் உருவாகி

இருக்கின்றன. அவ்வாறு உருவான கருவிகளுள் மனமும் ஒன்று. அவ்வளவுதான்.

உலக வழக்கிலே, (சில வேளைகளில் தத்துவ நூல் வழக்கிலும்கூட) மனம், புத்தி, அகங்காரம் இந்த மூன்றையுமே, பொதுவாக மனம் என்னும் சொல்லால் குறிப்பிடுவதும் உண்டு.

முக்குணங்களையும் தன் இச்சைப்படி இயக்கும் வல்லமை ஈஸ்வரனுக்கு இருப்பது போலவே,

அந்த முக்குணங்களால் ஆகிய மனத்தைத் தன் இச்சைப் படி இயக்கும் வல்லமை, ஆத்மாவுக்கு இயல்பாகவே இருக்கிறது.

எனினும்,

குணத்தொகுதியோடு தாதாத்மியப்பட்டு இருப்பதன் காரணமாக, ஆத்மாவானது மனத்தோடும், தாதாத்மியப் பட்டு, அந்த மனத்துக்கு அடிமையாகிக் கிடக்கிறது.

அதனால், மனத்தைத் தன் இச்சைப்படி இயக்குவதற் கான வல்லமையை இழந்து விட்டு, அந்த மனம்போன போக்கெல்லாம் ஆத்மா போய்க் கொண்டு இருக்கிறது.

பாவம் செய்யக்கூடாது என்று தெரிந்திருந்தும், மனிதன் மேலும் மேலும் பல பாவங்களைச் செய்வதற்கு, இதுவே காரணமாகும்.

நம் ஒவ்வொருவர் மனத்திலும் பாவம் செய்வதற்கான இயல்புகளும், புண்ணியம் செய்வதற்கான இயல்புகளும். கலந்தே அமைந்திருக்கின்றன. இந்த இயல்புகளுக்கு ஆங்கிலத்தில் (Tendencies) என்று பெயர். வேதாந்த பரிபாஷையில் இவற்றை வாசனைகள் என்று சொல்லுவார்கள்.

சிலருடைய மனத்திலே பாபவாசனைகள் மிகுதியாகவும், புண்ணிய வாசனைகள் குறைவாகவும் இருக்கும். அவர்களைத்தான் நாம் பாபிகள் என்கிறோம்.

மற்றும் சிலருடைய மனத்திலே புண்ணிய வாசனைகள் மிகுதியாகவும் பாப வாசனைகள் குறைவாகவும் இருக்கும். அப்படிப்பட்டவர்களைத் தான் நாம் புண்ணியவான்கள் என்கிறோம்.

ஆனால்,

மக்களில் பெரும்பாலோருடைய மனத்திலே, பாப வாசனைகளும் புண்ணிய வாசனைகளும் ஏறக்குறைய சம அளவிலேயே கலந்திருக்கும். அவர்கள் தாம் சராசரி மனிதர்கள் எனப்படுவோர்.

## இன்ப துன்பங்களைக் கடந்த நிலையே கடவுள் நிலை

இந்த வாசனைகள் தாம், விழிப்புக் காலத்திலும் கனவுக் காலத்திலும் நம் மனத்திலே இடையறாது பல எண்ணங்களைத் தோற்றுவித்து, அதனை இயக்கிக் கொண்டிருக்கின்றன. அப்போது, மனத்திலே வாழ்வை உடைய சிதாபாஸனும், அந்த வாசனைகள் ஆட்டி வைத்தபடியெல்லாம் ஆடிக் கொண்டிருக்கிறான். அந்த சிதாபாஸனிடத்தில் வைத்த அபிமானத்தின் காரணமாக, அவன் ஆடும் ஆட்டங்களையெல்லாம், தான் ஆடும் ஆட்டங்களாக ஆத்மா எண்ணிக் கொள்கிறது.

உண்மையில் ஆத்மா ஆடுவதும் இல்லை. அசைவதும் இல்லை. அதற்கு எவ்வித இயக்கமுமே கிடையாது. ஈஸ்வரனும் அப்படித்தான். ஒரு காந்தக் கல்லின் எதிரே வைக்கப்பட்ட இரும்புத் தூள்கள் தாமாகவே அசைவது போல, ஈஸ்வரன் எதிரில் முக்குணங்களும் தாமாகவே இயங்கிக் கொண்டிருக்கின்றன, எனினும், அவை ஈஸ்வரனது இச்சைப்படிக்கு மட்டுமே இயங்குவதால் அவற்றை ஈஸ்வரன் இயக்குகிறான் என்பதாக உபசார வழக்கில் வந்து விட்டது.

ஈஸ்வரன் இயங்காத போது, ஈஸ்வரனுக்கு வேறாக அல்லாத ஆத்மா மட்டும் எப்படி இயங்க முடியும்? சூரியன் இயங்காமல் இருந்து கொண்டே, பூமியின் இயக்கத்தால்,

தான் இயங்குவது போன்று காட்சியளிக்கிறது அல்லவா? அதே போல, ஆத்மாவும் தான் இயங்காமல் இருந்து கொண்டே மனத்தின் இயக்கத்தால் தானும் இயங்குவது போல் தோற்றம் அளிக்கிறது.

மனம் இயங்கும் போது அதிலே வாழ்வை உடையவனுன சிதாபாஸனிடத்திலும் இயக்கங்கள் ஏற்படுகின்றன. அந்த இயக்கங்களில் உடன்பாடு (Positive) எதிர் மறை (Negative) என இருவகைகள் உண்டு. அவற்றை நாம் முறையே இன்பம் என்றும் துன்பம் என்றும் சொல்லுகிறோம்.

உண்மையில், இன்பமும் துன்பமும் சிதாபாஸனுக்கு உரியவையே அன்றி, ஆத்மாவுக்கு உரியவை அல்ல- எனினும் சிதாபாஸனிடத்தே வைத்த இன்ப துன்பங்களை, ஆத்மா தன்னுடைய இன்ப துன்பங்களாக ஏற்றுக் கொள்கிறது.

ஆத்மா தன்னுடைய குணத் தொகுதியின் தாதாத்மியத்திலிருந்து விடுபடும் வரையில், இன்பங்களும் துன்பங்களும் அதற்கு இருந்து கொண்டுதான் இருக்கும். தாதாத்மியத்திலிருந்து விடுபடுவதே முக்தி என்பதையும், அந்த முக்தியே கடவுள் நிலை என்பதையும் நாம் முன்னமேயே கண்டுள்ளோம். எனவே, கடவுள் நிலை என்பது, உலகியலில் நாம் அனுபவித்துக் கொண்டிருக்கிற இன்பங்களையும் துன்பங்களையும் கடந்த நிலை என்று ஆகிறது. அல்லவா?

இன்ப துன்பங்களை எப்படிக் கடப்பது? இன்பத்தில் வேட்கை இல்லாமலும் துன்பத்தில் வெறுப்பு இல்லாமலும் இரண்டையும் சமமாகக் கருதிப் பழகுவதே இன்ப துன்பங்களைக் கடப்பதற்கான வழியாகும். இத்தகைய சமத்துவ புத்தியே யோகம் எனப்படுவது.

நம்மிடம் சுயநலப்பான்மை உள்ளவரையில், இந்தச் சமத்துவ புத்தி ஏற்படாது. இன்பத்தில் வேட்கையும், துன்பத்தில் வெறுப்பும் கொள்ளுகிற மனப்பான்மையே சுய நலப்பான்மை. ஆகையால், முக்தி எனப்படும் கடவுள்

நிலையை அடைவதற்கு ஆசைப்படுபவர்கள், முதலில் தங்கள் சுயநலப்பான்மையை விட்டொழிக்க வேண்டும். கடவுள் நிலையை அடைவதற்கு இடையூறாய் இருப்பதன் காரண மாகவே சுயநலப்பான்மை பாவம் என்று சொல்லப்படு கிறது.

இதே போல்,

கடவுள் நிலையை அடைவதற்கு உதவியாய் இருப்பதன் காரணத்தால் தன்னலமறுப்பும் பரோபகாரச் சிந்தையும் புண்ணியங்கள் என்று போற்றப்படுகின்றன.

## இன்பம் தேடுவோரில் நான்கு வகையினர்

புண்ணியங்களிலும் இரண்டு வகைகள் இருக்கின்றன. ஒன்று, காமியமான புண்ணியம். மற்றொன்று, நிஷ்காமிய மான புண்ணியம். ஒருவன் தன்னுடைய நன்மையின் பொருட்டுப் பிறருக்குச் செய்கிற உபகாரங்கள் காமிய மான புண்ணியங்கள். இவற்றைக் காமிய கர்மாக்கள் என்றும் சொல்லுவார்கள். ஒருவன், தனக்கு விளையக் கூடிய நன்மையையோ தீமையையோ கருத்தில் கொள் ளாமல் பிறருக்குச் செய்கிற உபகாரங்கள் நிஷ்காமியமான புண்ணியங்கள். இவற்றை நிஷ்காமிய கர்மாக்கள் என்றும் சொல்லுவார்கள்.

சுயநலப்பான்மையோடு செய்யப்படுகிற எல்லாக் காரியங்களுமே பாவங்கள்தாம். என்றாலும், பாவத்திலும் இரண்டு வகைகள் இருக்கின்றன. ஒன்று, பிறருக்குத் தீங்கு செய்யாமலே ஒருவன், தனக்கு வேண்டிய இன்பங்களைத் தேடிக்கொள்வது. மற்றொன்று. பிறருக்குத் தீங்கு செய்வதன் மூலம் ஒருவன் தனக்கு வேண்டிய இன்பங்களைத் தேடிக் கொள்வது.

இவற்றுள்,

முதலாவது வகையைச் சேர்ந்த பாவத்தை உலக வழக்கில் எவரும் பாவம் என்று சொல்லுவது இல்லை. அற

நூல்களும் அதைப்பாவம் என்று கூறுவதில்லை. ஆகையால், அதற்கு அரசதண்டனையோ ஈஸ்வரதண்டனையோ கிடையாது.

இரண்டாவது வகையைச் சேர்ந்த பாவத்தைத்தான், உலக வழக்கிலும் அறநூல் வழக்கிலும் பாவம் என்று கூறுகிறோம். அந்தப் பாவத்துக்கு ஆளானவர்கள், அரச தண்டனையிலிருந்து தப்பினாலும் தப்பிவிடலாம். ஈஸ்வர தண்டனையிலிருந்து அவர்கள் ஒருநாளும் தப்ப முடியாது!

பிறருக்குத் தீங்கு செய்வதன் மூலம் தனக்கு இன்பம் தேடிக் கொள்பவனைக் காட்டிலும் பிறருக்குத் தீங்கு செய்யாமலே தனக்கு இன்பம் தேடிக்கொள்பவன் மேலானவன்.

அவனைக் காட்டிலும், தன்னுடைய நன்மையின் பொருட்டு பிறருக்கு உபகாரம் செய்கிறவன் மேலானவன்.

அவனைக்காட்டிலும், தன்னுடைய நன்மை தீமைகளையே சிறிதும் கருதிப் பாராமல், பிறருக்கு உபகாரம் செய்கிறவன் மிகமிக மேலானவன்.

இந்த நாலாவது வகையைச் சேர்ந்தவன்தான், பிறருடைய இன்ப துன்பங்களைத் தன்னுடைய இன்ப துன்பங்களாக மதிப்பவன். இவ்வாறு மதிக்கக்கூடிய மனநிலை ஒருவனுக்கு வந்துவிட்டால் அவன் பெரும்பாலும் தன்னுடைய குணத்தொகுதியோடுள்ள தாதாத்மியத்திலிருந்து விடுபட்டவன் என்றே சொல்ல வேண்டும்.

## முதலில் நாம் வாசனைகளை வெல்ல வேண்டும்

முதலில் நாம் எக்காரணத்தை முன்னிட்டும் பிறருக்குத் தீங்கு செய்யாமல் இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். இதுவே, மனிதனுடைய ஆத்மசாதனையின் முதலாவது படி.

பின்னர்,

நம்முடைய நன்மையின் பொருட்டாவது பிறருக்கு உபகாரம் செய்ய நாம் கற்றுக்கொள்ள வேண்டும். இது இரண்டாவது படி.

அதன்பிறகு, நமக்கு ஒரு தீங்கு நேருவதாய் இருந்தால் கூட அதைப் பொருட்படுத்தாமல் பிறருக்கு உபகாரம் செய்ய நாம் கற்றுக் கொள்ள வேண்டும். இதுதான் மூன்ருவது படி.

ஒரு புருவின் உயிரைக் காப்பாற்றுவதற்காகத் தன் உயிரையே தியாகம் செய்ய முன்வந்த சிபிச்சக்கரவர்த்தி, இந்த மூன்ருவது படியில் நின்றவர்.

உயிர்கள் அனைத்துமே என்ருவது ஒருநாள் இந்த மூன்ருவது படியை அடைந்தே தீரவேண்டும். அப்படி அடைவதற்காகத்தான் அவற்றிற்கு மீண்டும் மீண்டும் பிறவிகள் கொடுக்கப்படுகின்றன.

ஒவ்வொரு பிறவியிலும், உயிர்களுக்குள்ளே பொதிந்து கிடக்கிற பாவ வாசனைகளும், புண்ணிய வாசனைகளும், ஈஸ்வரனுடைய இச்சைப்படி மூலப்பிரகிருதியில் ஏற்படுகின்ற கலக்கத்தின் காரணமாக கிளறி விடப்படுகின்றன.

அவ்வாறு கிளறிவிடப்பட்ட வாசனைகள், மனத்தை வந்து தாக்கி, அதைப் பாவச் செயல்களிலும் புண்ணியச் செயல்களிலும் ஈடுபடுத்துகின்றன.

அப்போது,

அந்த மனத்தோடு தாதாத்மியப்பட்டிருக்கிற ஆத்மாவும், தன்னைப் பாபி எனவும், புண்ணியவான் எனவும் எண்ணிக் கொள்கிறது.

உண்மையில் ஆத்மா பாவியும் அல்ல, புண்ணியவானும் அல்ல. ஏனென்ருல், பாவபுண்ணியங்களுக்கு நிலைக்களமாகிய மனத்தின் இயக்கங்களை அது சும்மா பார்த்துக் கொண்டிருக்கிற பொருளே தவிர, அந்த இயக்கங்களில் பங்கு கொள்கிற பொருள் அல்ல.

தான் எந்த ஒரு செயலையும் செய்யாமல், பிறர் செய்யும் செயல்களைச் சும்மா ஒதுங்கி நின்று பார்த்துக் கொண்டிருக்கும் ஒருவனுக்குச் சாட்சி என்று பெயர்.

அதே பொருளில் தான், வேதாந்த பரிபாஷையில் ஆத்மாவைச் சாட்சி என்று சொல்லுகிறார்கள்.

தான் கர்த்தா அல்ல—வெறும் சாட்சியே என்னும் மெய்யுணர்வு என்றைக்கு ஏற்படுகிறதோ, அன்றைக்கே ஆத்மாவுக்கு முக்திப்பேறு சித்தித்துவிட்டால், ஈஸ்வரன் தன் இச்சைப்படி முக்குணங்களை இயக்குவது போல, நாமும் நம் இச்சைப்படி நம்முடைய மனத்தை இயக்குவதற்கு இயலும். அதுவரையில் நம் மனமானது நம் சொல்படி கேட்காது. வாசனைகள் ஆட்டி வைத்தபடி அது ஆடிக் கொண்டிருக்கும்.

சுழன்று கொண்டிருக்கும் பல்சக்கரத்திலே நாம் உடுத்தியிருக்கும் துணியொன்றுமாட்டிக்கொண்டுவிட்டால், அந்தத் துணியை அதிலிருந்து விடுவிப்பதற்குச் சக்கரத்தின் சுழற்சியை நாம் முதலில் நிறுத்தியாக வேண்டும். அல்லவா?

நம்முடைய மனமானது அந்தப் பல் சக்கரத்தைப் போன்றது. சிதாபாஸன் நமது துணியைப் போன்றவன். அந்தச் சிதாபாஸன் அசைவற்ற நிலையை அடைந்த போது தான், அவனை அபிமானித்துள்ள ஆத்மாவும் தன் அசைவற்ற சாட்சிஸ்வரூபத்தை அனுபவவாயிலாக அறியமுடியும். அனுபவ வாயிலாக அன்றி, ஆயிரம் புத்தகங்களைப் படித்தாலும் உபதேசங்களைக் கேட்டாலும் அந்த உயரிய நிலையை எவராலும் உணர முடியாது.

சிதாபாஸன் அசைவற்ற நிலையை அடைய வேண்டுமானால் அவனது உறைவிடமாகிய மனம் முதலில் அசைவற்ற நிலையை அடைய வேண்டும். அதாவது, மனம் என்ற பல்சக்கரத்தின் சுழற்சி நிறுத்தப்பட வேண்டும்.

அந்தப் பல் சக்கரத்தைச் சுழற்றுபவை வாசனைகளே. அல்லவா? அந்த வாசனைகளை நாம் வென்று அடக்க வேண்டும். அப்போது தான் நம் மனம் நமக்கு அடங்கும்.

## வாசனைகளை வெல்லும் வழி

வாசனைகளை வெல்லுவது எப்படி ?

வாசனைகளை ஒரேயடியாகவெல்ல முடியாது. அவற்றைச் சிறிது சிறிதாகத்தான் வெல்ல வேண்டும்.

வாசனைகளில் புண்ணிய வாசனைகள், பாவ வாசனைகள் என இரண்டு வகைகள் இருக்கின்றன. அல்லவா ? இவை இரண்டும் ஒன்றுக்கொன்று இயல்பிலே முரண்பட்டவை. அந்த முரண்பாட்டைப்பயன்படுத்தித்தான் அந்த இரண்டையும் நாம் ஒழித்துக்கட்ட வேண்டும்.

அதாவது,

முதலில் புண்ணிய வாசனைகளைக் கொண்டு, நாம் பாவ வாசனைகளை ஒழிக்க வேண்டும். பிறகு அந்தப் புண்ணிய வாசனைகளையும் ஒழித்துவிட வேண்டும். ஏனென்றால், பாவ வாசனைகள் இரும்புச் சங்கிலிகளைப் போன்றவை என்றால், புண்ணிய வாசனைகள் தங்கச் சங்கிலிகளைப் போன்றவை. தங்கம், இரும்பைவிட உயர்ந்த பொருளாய் இருக்கலாம். ஆனால், இரண்டு சங்கிலிகளும் நம்மை இறுக்கிப் பிணிப்பவையாக இருக்கின்றன. ஆகையால், இரண்டையும் அறுத்து எறிந்துவிட்டு நாம் விடுதலை பெறவேண்டும்.

உலகியல் வாழ்வில் பல இன்பங்களைப் பெறவேண்டும் என்பதுதான் நம் எல்லாருடைய குறிக்கோளாகவும் இருக்கிறது. அந்த இன்பங்களுக்காக, பிறருக்குக் கெடுதல் செய்யுமாறு தூண்டுவது பாவ வாசனை. பிறருக்கு ஒரு நன்மையைச் செய்து, அவர் மூலம் தானும் ஒரு நன்மையைப் பெறுமாறு தூண்டுவது காமியமான புண்ணிய வாசனை. நம் கோரிக்கைகள் நிறைவேறுவதற்காக இறைவனை வழிபடத் தூண்டுவதும் இதே வாசனைதான்.

இந்தக் காமியமான புண்ணிய வாசனையைக் கொண்டு நாம் பாவ வாசனையை வெல்ல முயல வேண்டும்

அதாவது,

வாழ்க்கையில் நமக்குத் தேவையான இன்பங்களைப் பிறருக்குத் தீமை செய்வதன் மூலம் அடைவதற்கு ஆசைப் படாமல், பிறருக்கு ஓர் உதவி செய்வதன் மூலமாகவோ, அல்லது இறைவனை வழிபடுவதன் மூலமாகவோ, அடைவ தற்கு நாம் ஆசைப்பட வேண்டும்.

நாம் அவ்வாறு உண்மையிலேயே ஆசைப்படுவோமானல் ஈஸ்வரன் அதைக் கட்டாயம் நிறைவேற்றி வைப்பார். அப்போது, நமக்குத் தேவையான இன்பங்களைப் பாபச் செயல்களின் மூலம் அடைவது என்ற தீய பழக்கம் நம் மனத்தை விட்டு அகன்று, காமியமான புண்ணியச் செயல் களின் மூலம் அடைவது என்ற நற்பழக்கம் நம் மனத்துக்கு வந்துவிடும். அத்தகைய நல்லியல்பு நம்மிடத்தே எந்த அள வுக்கு உருவாகுகிறதோ, அந்த அளவுக்கு நாம் நமது பாப வாசனைகளை வென்றவர்கள் ஆவோம்.

இந்த நிலையில்,

நாம் பிறருக்கு உதவி செய்வதும், இறைவனை வழிபடுவ தும், 'நம்முடைய நன்மையின் பொருட்டே' என்னும் உணர்வு நம்மிடம் குடிகொண்டிருக்கும். அல்லவா ?

அடுத்தபடியாக,

இந்த 'நம்முடைய நன்மையின் பொருட்டே' என்னும் உணர்வை உள்ளத்தினின்றும் அகற்றிவிடுவதற்கு நாம் ஆசைப்படவேண்டும். நாம் அவ்வாறு உண்மையிலேயே ஆசைப்பட்டால், ஈஸ்வரன் அதையும் கட்டாயம் நிறை வேற்றி வைப்பார். அப்போது, நமக்குக் கிடைக்கக் கூடிய நற்பயன்களைப்பற்றிய நினைவு இல்லாமலே பிறருக்கு உதவி செய்வது, இறைவனை வழிபடுவது போன்ற நற்காரியங்களைச் செய்யும் பழக்கம் நம்மிடத்தில் உருவாகி வளரும்.

அந்தப் பழக்கம் நமக்கு வழக்கம் ஆகிவிட்டால் அதாவது, நாம் விரும்பினல்கூட மாற்றிக்கொள்ள முடியாத அளவுக்கு, அது நம் இயல்பிலே உறைந்து போய் விடுமானல்

பிறருக்கு உதவி செய்வதால் நமக்குச் சில இழப்புக்கள் ஏற்படும் என்பது நமக்கு உறுதியாய்த் தெரியும் போது கூட நம்மால் அவர்களுக்கு அந்த உதவியைச் செய்யாமல் இருக்க முடியாது என்னும் மன நிலையை நாம் அடைந்து விடுவோம்.

இதே போல்,

இறைவனிடமிருந்து நாம் கேட்டுப் பெற விரும்புவது எதுவுமே இல்லை என்று இருந்தால் கூட, நம்மால் அவரை வழிபடாமல் இருக்க முடியாது என்னும் மன நிலையை நாம் அடைந்து விடுவோம்.

அத்தகைய வழிபாடும் உபகாரச் செயல்களும்தாம் நிஷ்காமிய புண்ணியங்கள் எனப்படுபவை. இந்த நிஷ்காமிய புண்ணியங்களில் நாம் ஈடுபட நம்மைக் காமிய புண்ணியங்களில் மட்டுமே ஈடுபடுத்துகிற புண்ணியங்களும் நம்மை விட்டு ஒழிந்து போய்விடும்.

எனவே,

காமியமான புண்ணியங்களின் துணையைக்கொண்டு பல பாபவாசனைகளையும். நிஷ்காமியமான புண்ணியங்களின்துணையைக் கொண்டு புண்ணியங்களின் வாசனைகளையும் நாம் ஒழித்து விடவேண்டும் என்று ஆகிறது. நம்முடைய மனத்தின் மீது சர்வாதிகாரம் செலுத்துகிற வாசனைகளை வென்று அடக்குவதற்கு இது ஒன்றே வழி

## அபேத உணர்வு உருவாகும் முறை

வாசனைகள் இவ்வாறு வெல்லப்பட்டுவிட்டால் அவை நம் மனத்தை வந்து தாக்கமாட்டா.

வாசனைகளால் தாக்கப்படாத மனத்திலே இன்ப துன்ப வடிவமான சலனங்கள் ஏற்படமாட்டா.

சலனங்கள் ஏற்படாத மனத்திலே சிதாபாஸன் சிறிதும் ஆடாமல் அசையாமல் ஒளி வீசி நிற்பான்.

சிதாபாஸன் அவ்வாறு அசைவற்றுக் காட்சியளிக்கும் போது, அந்தச் சிதாபாஸனையே தன்னுடைய உண்மையான

ஸ்வரூபமாக எண்ணிக் கொண்டிருக்கிற ஆத்மாவானது, தானும் தன்னுடைய இயல்பான அசைவற்ற நிலையை அனுபவத்தால் அறிகிறது.

அந்த அனுபவம் மிகவும் புதுமையானது மட்டும்அல்ல. மிகவும் சுகமானதும் கூட. இன்பம் துன்பம் இவ்விரண்டையும் கடந்த சுகம் அது. அந்தச் சுகம்தான் ஆத்மாவின் உண்மையான இயல்பு. உண்மையான வடிவம். அதாவது, ஆத்மாவே சுகம். சுகமே ஆத்மா!

ஆத்மா, தன் இயல்பான சுகஸ்வரூபத்தை ஒரு தடவை அனுபவித்துப் பார்த்துவிட்டால் அப்புறம் அதை என்றைக்குமே மறக்காது. இது மட்டும் அல்ல. அதே அனுபவத்தில் அது மீண்டும் மீண்டும் திளைப்பதற்கு ஆர்வம் கொள்ளும். அப்படித் திளைக்கத் திளைக்கத் தன்னுடைய குணத் தொகுதிகளோடு கொண்டிருந்த தாதாத்மிய உறவிலிருந்து அது சிறிது சிறிதாக விடுபட்டுக்கொண்டே வந்துவிடும்.

அப்படி விடுபடும்போது, அந்தக் குணத் தொகுதியாகிய மனம், புத்தி, அகங்காரம், ஐம்புலன்கள், ஐம்பொறிகள் இவற்றினிடத்தே அது வைத்திருந்த அபிமானமும் ஒழிந்துவிடும்.

அந்த அபிமானம் ஒழிந்து விட்டால், அதுவரை தன்னை ஒரு சிதாபாஸனாக எண்ணிக் கொண்டிருந்த ஆத்மாவானது, தான் சிதாபாஸன் அல்ல என்னும் உண்மையை உணர்ந்து தன்னை ஆத்மஸ்வரூபமாக அறியத் தொடங்கும்.

அதே சமயத்தில், உலகில் உள்ள மற்ற ஜீவர்களும் தன்னைப் போல ஆத்மஸ்வரூபர்களேயன்றிச் சிதாபாஸர்கள் அல்லர் என்னும் உணர்வும் அதற்கு உறுதியாக ஏற்பட்டுவிடும்.

அந்த உணர்வு ஏற்பட்டு விட்டால் 'நான் வேறு, இந்த உலகில் உள்ள பிற உயிர்கள் வேறு' என்னும் பேத உணர்வு நீங்கி,

'இந்த உலகிலுள்ள எல்லா உயிர்களாகவும் நானே வாழ்ந்து கொண்டிருக்கிறேன்' என்னும் அபேத உணர்வு உருவாகும்.

**சத்சங்கம்**

ஆன்மாவுக்குக் குணத்தொகுதியோடு உள்ள தாதாத்மியத்தால் 'நான் அபூர்ணன்' (அதாவது, குறைபாடுகளை உடையவன்) என்னும் மயக்க உணர்வு உண்டாகிறது.

இந்தக் குறைபாடுகளை நிறைவு செய்துகொள்ளும் பொருட்டு, ஆன்மா எனக்கு அது வேண்டும் இது வேண்டும் என்று ஆசைப்படுகிறது.

ஆன்மாவின் அந்த ஆசைகளை நிறைவேற்றுவதற்காக, ஈஸ்வரன் அதற்குப் பலவேறு வகையான பிறவிகளைக் கொடுத்து அதன் வாழ்வினைப் பாவ புண்ணிய மார்க்கங்களிலே நடத்திச் செல்லுகிறான். அந்தப் பாவ புண்ணியங்களின் பலன்களையும் ஆன்மாவுக்கு ஊட்டுகிறான்.

இதனாலேயே ஆன்மா, இன்பங்களுக்கும் துன்பங்களுக்கும் ஆளாகிறது.

இந்த உண்மைகளை, நாம் இதுவரை விரிவாக ஆராய்ந்து அறிந்தோம்.

இவற்றையெல்லாம் சிந்தித்துப் பார்க்கும்போது, இந்த உலகியலில் நாம் அடைந்து வருகிற இன்ப துன்பங்கள் அனைத்திற்கும் நம்முடைய ஆசைகளே காரணம் என்பது தெளிவாக விளங்குகிறது. அல்லவா?

எனவே,

இன்பம் துன்பம் இந்த இரண்டையும் கடந்த ஆத்ம சுகானுபவத்தை அடைய வேண்டுமானால் நாம் நமது ஆசைகளிலிருந்து விடுபட வேண்டும்'

அதாவது,

நம் உள்ளத்தில் எந்த ஓர் ஆசையும் எழுவதற்கு இடம் கொடுக்கக்கூடாது,

வாழ்க்கையில் விரக்தி ஏற்படும்போதுதான். நம் உள்ளத்திற்கு அத்தகைய ஒரு பரிபக்குவமும் ஏற்படுகிறது. விரக்திக்கு வைராக்கியம் என்று இன்னொரு பெயர் உண்டு. வைராக்கியம் என்னும் சொல்லுக்குப் பிடிவாதம் என்பதாக ஒரு தவருன பொருள் வழக்கிலிருந்து வருகிறது, உலகியல் இன்பங்களில் விருப்பம் இல்லாது இருக்கும் உயரிய நிலேயே வைராக்கியம் எனப்படுவது. அந்த உயரிய நிலேயை அடைந்தால் ஒழிய, நம் உள்ளம் அசைவற்று அடங்காது. உள்ளம் அசைவற்று அடங்கினுலன்றி முக்திப்பேறு சித்திக்காது.

முக்திப்பேறு பெற்று விட்டவர்களே முக்தர்கள் எனப்படுவர். முக்திப் பேறு பெருதவர்களுக்குப் பெத்தர்கள், அதாவது, கட்டுப்பட்டவர்கள் என்று பெயர். பெத்த நிலேயில் உள்ளவர்களால் தங்களுடைய மன மொழி மெய்களின் மீது ஆட்சி செலுத்த முடியாது. ஈஸ்வரன் ஆட்டி வைத்தபடியெல்லாம் அவர்கள் ஆடிக் கொண்டிருக்க வேண்டியவர்களே, ஆனுல். அவர்களுக்கு ஒரேயொரு சுதந்திரம் உண்டு. அதுதான் ஆசைப்படும் சுதந்திரம். அவர்கள் ஆசைப்பட்டு விட்டால், அந்த ஆசையை நிறைவேற்றி வைக்க வேண்டியது ஈஸ்வரனுடைய கடமையாகி விடுகிறது.

ஆசைப்படுவதற்கு ஒருவர் சுதந்திரம் உடையவராய் இருப்பாரானுல், ஆசைப்படாமல் இருப்பதற்கும் அவர் சுதந்திரம் உடையவராக இருக்க வேண்டும். அல்லவா?

ஆம்.

எதற்குமே ஆசைப்படாமல் இருக்கும் சுதந்திரம் நமக்கு நிச்சயமாக இருக்கிறது. ஆனுல்,அந்தச் சுதந்திரத்தை நாம் பயன்படுத்திக் கொள்வதில்லே. அவித்தையின் காரணமாக நாம் ஆசைகளுக்கு அடிமைப்பட்டவர்களாய் வாழ்ந்து வருகிருேம். ஆசைகளிலிருந்து விடுபட வேண்டும் என்ற எண்ணமே நமக்கு எழுவதில்லே.

அந்த எண்ணம் நமக்கு எழவேண்டுமானுல் ஏற்கெனவே ஆசைகளிலிருந்து விடுபட்டுள்ள பெரியோர்களோடு நாம்

நெருங்கிப் பழக வேண்டும். அத்தகைய பெரியோர்களின் கூட்டத்துக்கே சத்சங்கம் என்று பெயர்.

## குருவே துணை

சத்சங்கத்தோடு தொடர்பு கொள்ளாமல், எந்த ஒரு மனிதனுலும் முக்தி அடைய முடியாது என்பது சங்கரர் கருத்து.

சத்சங்கத்தின் தொடர்பு மிக வலுப்பட வலுப்பட, ஒருவனது உலகியல் தொடர்புகள் குறைந்துகொண்டே வரும். உலகியல் தொடர்புகள் குறையக் குறைய, உள்ளத்தில் எழும் ஆசைகளும் குறைந்துகொண்டே வரும். ஆசைகள் குறையக் குறைய உள்ளத்தின் (அசைவற்று நிற்கும்) ஆற்றல் வளர்ந்துகொண்டே வரும். உள்ளம் அந்த அசைவற்ற நிலையில் உறுதிப்பட்டு விடுமானல், அதாவது, எப்போதும் அசைவற்று இருப்பதே உள்ளத்தின் இயல்பான நிலையாக ஆகிவிடுமானல், அதுவரையில் பெத்தனக இருந்த மனிதன் முக்தனகி விடுகிருன்.

முக்தனகி விட்டவனுக்கு, வாசனைகள் செயலற்றுப் போய்விடுகின்றன. வாசனைகளே பாவ புண்ணியங்கள் எனப்படுபவை. பாப வாசனைகளைப் பாவங்கள் என்கிருேம், புண்ணிய வாசனைகளைப் புண்ணியங்கள் என்கிருேம். வாசனைகள் செயலற்றுப் போகும்போது, பாவ புண்ணியங்களும், அவற்றின் பயனகிய இன்ப துன்பங்களும் தாமாகவே ஒழிந்து போகின்றன. அந்த நிலையில், அந்த இன்ப துன்பங்களை நுகர்வதற்காக ஈஸ்வரனல் அளிக்கப்படுகிற பிறவிகளும் இல்லாமல் போய்விடுகின்றன. இவ்வாறு பிறப்பே இல்லாமல் போகும்போது, இறப்பு எனப்படுகிற மரணமும் வெல்லப்பட்டதாகி விடுகிறது.

இத்தகைய ஜீவன் முக்தி நிலையை அடைவதற்கான பரிபக்குவம், ஒருவனுக்குச் சத்சங்கத்தின் வாயிலாகத்தான் ஏற்படுகிறது. உலகில் உள்ள அனைத்து இன்பங்களிலும்

விரக்தி அடைந்து, அனைத்துத் துன்பங்களிலிருந்தும் உடனடியாக விடுதலை பெற வேண்டும் என்ற தீவிரமான வேட்கையை அடைவதே, அந்தப் பரி பக்குவத்தின் அடையாளம் ஆகும். அந்த மாதிரிப் பரிபக்குவம் ஒருவனுக்கு வந்து விட்டால், தலையில் தீப்பற்றிக்கொண்டவன் தண்ணீரைத் தேடி ஓடுவதுபோல், அந்த மனிதன் தன் விடுதலைக்கு வழி காட்டக்கூடிய ஒரு குருவைத் தேடி ஓடுவானும் !

குருவின் துணையில்லாமல், எவராலுமே முக்தி அடைய முடியாது என்பது, எல்லாச் சமயங்களாலும் ஏற்றுக் கொள்ளப்படுகிற ஒரு கோட்பாடு.

## கயிற்று அளவு கானல் நீர் கனவுலகம்

உண்மையான விடுதலை வேட்கையோடு குருவைத் தேடுபவனை, ஒரு தகுதி வாய்ந்த குருவும் தாமாகவே தேடி வந்து அடைவாராம். அதாவது, அத்தகைய சீடனையும் குருவையும் இறைவனே முன்னின்று ஒன்றுகூட்டி வைப்பாராம். அந்தக் குருவை இறைவனாகவே கருதிச் சீடன் அவரிடம் சரணாகதி அடையவேண்டும். அப்படி அடைந்து விட்டால், அவர் அவனுக்கு தத்துவ உபதேசம் செய்து, அவனது அவித்தையைக் களைந்து, அவனுடைய துன்பங்கள் அனைத்திலிருந்தும் அவனுக்கு விடுதலை அளித்து, தன்னைப் போலவே அவனும் அழியாத பரமானந்த நிலையை அடைந்து திளைத்திருக்குமாறு அவர் அருளுவார்.

அப்படியானால்,

அவர் கூறுகிற அந்தத் தத்துவ உபதேசம் என்ன என்பதை அறிந்து கொள்ள நமக்கு ஆர்வம் ஏற்படுகிறது அல்லவா ?

'நீயும் இறைவனும் ஒன்றே' என்பதுதான், அவர் அந்தச் சீடனுக்குக் கூறுகிற தத்துவ உபதேசம் !

ஆனால், அதைக் கேட்டவுடன், 'உண்மைதான். நானே இறைவன்' என்று அந்தச் சீடனால் ஒப்புக் கொண்டுவிட முடியுமா ?

'நான் எப்படி ஐயா இதை ஒப்புக்கொள்ளமுடியும்?இறைவனே இந்த உலகு அனைத்தையும் படைத்துக் காத்து அழிக்கக்கூடிய பேராற்றல் படைத்தவனாக இருக்கிறான். அவன் படைத்த உலகத்துக்குள்ளே கிடந்து நான் உழலுபவனாய் இருக்கிறேன். அவ்வாறு இருக்க, இறைவனும் நானும் எவ்வாறு ஒன்றாக முடியும்?' என்று கேட்கிறான் சீடன்.

அதற்குக் குரு சொல்லுகிறார்:

'இறைவன் இந்த உலகத்தைப் படைக்கவும் இல்லை, காக்கவும் இல்லை. அழிக்கவும் இல்லை. உண்மையில் உலகம் என்பதாக ஒரு பொருளே கிடையாது. அந்திமயங்கிய வேளையில் பாதையிலே கிடக்கும் ஒரு கயிறானது பாம்பாகக் காட்சியளிப்பது போல, மெய்ஞ்ஞானம் வரப் பெறாதவர்களின் கண்களுக்கு, இறைவனே இவ்வுலகமாகக்காட்சியளிக்கிறார்'

சீடன்: 'அப்படியானால், மெய்ஞ்ஞானம்வந்தவர்களுக்கு இந்த உலகமும் இதில் உள்ள பொருள்களும் கண்ணுக்குத் தெரியமாட்டாவா? அவர்களைப் பொறுத்தமட்டில் எல்லாம் ஒரே சூன்யமாகப் போய்விடுமா?'

குரு: 'அல்ல. அல்ல. மெய்ஞ்ஞானம் வந்தவர்களுக்கும் கூட உலகமும் உலகத்துப் பொருள்களும் கண்ணுக்குத் தெரியத்தான் செய்யும். எனினும் அவற்றை அவர்கள் உண்மைப் பொருள்களாய் மதிக்க மாட்டார்கள்'

சீடன்: 'கண்ணுக்கு எதிரே தெரிகின்ற பொருள்களை உண்மைப் பொருள்களாய் மதிக்காமல் வேறு எப்படி மதிப்பது?'

குரு: 'கானல் நீர்கூட, கண்ணுக்குத்தெரியத்தான் செய்கிறது. அதற்காக அது உண்மைப் பொருள் ஆகிவிடுமா?'

சீடன்: 'கானல் நீர் கண்ணுக்குத் தெரிந்தாலும் அதை நம்மால் அருந்தி அனுபவிக்க முடியாது. ஆனால் உலகியல் பொருள்களை நம்மால் அனுபவிக்க முடிகிறதே! அப்படியிருக்க, அவற்றை நாம் எப்படிப் பொய்ப்பொருள்கள்என்று தள்ள முடியும்?'

குரு: 'கனவில் கூடத்தான் நாம் உண்டும் உடுத்தும் கண்டும் களித்தும் எத்தனையோ பொருள்களை அனுபவிக்கிறோம். அதற்காக அவையெல்லாம் மெய்ப் பொருள்கள் ஆகிவிடுமா?'

## ஈஸ்வர உபாசனை இன்றியமையாதது

குருவினுடைய இந்த வாதம், தர்க்கரீதியாக ஒப்புக்கொள்ளக்கூடியதே என்று உணருகிறான் சீடன்.

இருந்தாலும், 'இவர் கூறுவது அறிவுக்குப் பொருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால், நம்முடைய அன்றாட வாழ்க்கைக்கும் அது பொருத்தமாக அமைய வேண்டாமா?' என்று அவன் திகைப்புறுகிறான்.

உலகம் ஓர் உண்மைப் பொருளே என்ற நம்பிக்கையில், அவன் பல கோடிப் பிறவிகளாகத் திளைத்துப் பழகியவன் அல்லவா? அந்தப் பழக்க வாசனையே அவனுக்கு இப்போது திகைப்பை உண்டு பண்ணுகிறது என்பதைத் தெரிந்துகொள்கிறார் குரு.

எனவே,

அந்த வாசனை போவதற்காக அவன் சில உபாசனைகள் செய்ய வேண்டும் என்று குரு தீர்மானிக்கிறார்.

உபாசனைகள் என்பவை, ஈஸ்வரனை நோக்கிச் செய்யப்படுகிற வழிபாடுகள் ஆகும். மந்திர செபம், அருச்சனை, தோத்திரம், ஓமம் ஆகிய இவையெல்லாம் வழிபாட்டின் அங்கங்கள். இந்த வழிபாடு, முதலில் நமக்கு வெளியே உள்ள ஒரு விக்கிரகத்தை, அல்லது சக்கரத்தை நோக்கிச் செய்யப்படுகின்றது. அப்போது அதற்கு பாஹ்ய உபாசனை என்று பெயர். பிறகு, அந்த விக்கிரகத்தை அல்லது சக்கரத்தை மனக் கண் முன் நிறுத்தி, வெளியே செய்யப்பட்ட அருச்சனை முதலியவைகள் மனத்தாலேயே செய்யப்படுகின்றன. அப்போது அதற்கு ஆந்தர உபாசனை என்று பெயர்.

பாஹ்ய உபாசனையின் பயனாக, உள்ளத்தில் பக்தியும் விரக்தியும் உருவாகி வளர்கின்றன. ஆந்தர உபாசனையின் பயனாக, உள்ளம் ஒருமுனைப்பட்டு நிற்கும் பழக்கத்தைப் பெறுகிறது. உள்ளம் ஒருமுனைப்பட ஒருமுனைப்பட, நம் சித்தத்தில் உள்ள பழக்க வாசனை எல்லாம் நீங்கி, அது ஒரு தூய்மையான பளிங்கினைப் போல் விளங்கத் தொடங்குகிறது. அது அப்படி விளங்கும் போது, குருவினிடமிருந்து பெற்ற தத்துவ உபதேசத்தை, தன்னுடைய அன்றாட வாழ்க்கையிலும் பயன்படுத்திப் பார்க்கக்கூடிய பரிபக்குவம் சீடனுக்கு ஏற்படுகிறது.

உலகிலே வேதாந்தம் படித்தவர்கள் மிகப் பலர் உளர். ஆனால், அந்த வேதாந்தமானது வெறும் ஏட்டுச் சுரைக்காயாக இருக்குமே தவிர, அவர்களுடைய வாழ்க்கைக்குப் பயன்படுவதாய் இருக்காது. வாழ்க்கைக்குப் பயன்படாத அந்த வேதாந்தப் படிப்பைக் கொண்டு எவருமே ஆத்ம ஞானத்தைப் பெற்றுவிட முடியாது.

வேதாந்தத் தத்துவங்களை, நம் வாழ்க்கையில் நேருகிற சிறுசிறு நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றிலும் நாம் கடைப்பிடித்துப் பழகவேண்டும். அப்படிப் பழகப் பழக, அந்தத் தத்துவங்கள் நம் உணர்விலே ஊறி, நம்முடைய சிந்தனைகள் செயல்கள் ஆகிய அனைத்திலும், அவைஇயல்பாகவே ஒளிவீசத்தொடங்கும். அந்த நிலையில்தான் அந்தத் தத்துவங்களின் சிறப்புக்களை நாம் அனுபவ வாயிலாக அறிந்தவர்கள் ஆவோம்.

ஈஸ்வரனை உபாசனை செய்யாதவர்களுக்கு, வேதாந்தம் அந்த மாதிரி அனுபவத்துக்கு வரமாட்டாது. அவர்கள் ஆயிரம் புத்தகங்களைப் படித்திருந்தாலும், அவற்றுள் ஒரு புத்தகத்தில் கூறப்பட்ட ஒரு விஷயத்தைக் கூட அவர்களுடைய வாழ்க்கையிலே நாம் பார்க்க முடியாது. நடமாடும் புத்தகாலயங்களைப் போல, அவர்கள் தாங்கள் கற்றவற்றையெல்லாம் கேட்போர் வியப்படையும் வண்ணம் பேசிக் கொண்டு 'திரிவார்கள். பிறருக்கு உபதேசங்களும் செய்

வார்கள். ஆனால் அந்த உபதேசங்களில் ஒன்றைக்கூட அவர்களால் கடைப்பிடித்து வாழ முடியாது.

அப்படி வாழ முடியாதவர்களால் முக்தியும் அடைய முடியாது. முக்தி அடையாவிட்டால் கூடப் பரவாயில்லை. முக்தி அடைவதற்கான பாதையிலே அவர்கள் ஓர் இம்மியளவும் முன்னேற முடியாது. சுருக்கமாகச் சொன்னால், அவர்கள் கற்ற வேதாந்தக் கல்வியானது, அவர்களுடைய வாழ்க்கைப் பிரச்னைகளுக்கு எள்ளத்தனையும் பயன்படமாட்டாது.

வேதாந்தம் வாழ்க்கைக்குப் பயன்பட வேண்டுமானால், ஈஸ்வர உபாசனை இன்றியமையாதது ஆகும். ஆகையால், பகவத் கீதையையும் உபநிடதங்களையும் படித்தால் மட்டும் போதாது. பகவானையும் தீவிரமாக வழிபடவேண்டும். அப்போதுதான் படித்த படிப்புப்பயனுடையதாக அமையும்.

## மாயை, அவித்தை, அதிஷ்டானம், அத்தியாசம்

ஈஸ்வரனை உபாசனை செய்தால், அவனுடைய திருவருளானது நம் உள்ளத்தின் உள்ளே துணையாக நின்று நமக்குக் குருவால் அளிக்கப்பட்ட உபதேசஉண்மைகளை நாம்அனுபவ வாயிலாக உணருவதற்கு உதவி செய்யும்.

அப்படி உணரும்போது, உலகியல் பொருள்களின் வடிவங்களையும், பெயர்களையும் குணங்களையும் பயன்களையும் கருத்தில் கொண்டு, அவற்றிற்கு உயர்வு தாழ்வு கற்பிக்கின்ற மனப்பழக்கம் நம்மைவிட்டு அகலத் தொடங்கும்.

அது அப்படி அகலும்போது,

பொன்னால் செய்த அணிகலன்கள் எல்லாம் முடிவில் பொன்னைஅன்றி வேறல்ல— மண்ணால் செய்த பாண்டங்கள் எல்லாம் முடிவில் மண்ணை அன்றி வேறல்ல— மரத்தால் செய்த பதுமைகள் எல்லாம் முடிவில் மரத்தை அன்றி வேறல்ல போல,

இவ்வுலகமும் மூலப் பிரகிருதியை அன்றி வேறல்ல என்னும் உண்மை, நம் உணர்விலே விளங்கும்.

அடுத்தபடியாக,

கயிற்றிலே தோன்றுகிற பாம்பு அந்தக் கயிற்றைத் தவிர வேறல்லாததாய் இருப்பது போல,

ஈஸ்வரனிடத்திலே தோன்றுகிற ஈஸ்வரனைத் தவிர வேறல்ல என்னும் பேருண்மை நமக்கு விளங்கத்தொடங்கும்.

அதாவது,

மூலப்பிரகிருதிக்கு வேருக, உலகம் என ஒன்று இல்லை. —ஈஸ்வரனுக்கு வேருக மூலப்பிரகிருதி என ஒன்று இல்லை— எனவே, ஈஸ்வரனுக்கு வேருக உலகம் என ஒன்று இல்லை என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல நம்மால் உணரப் படும்.

மங்கலான வெளிச்சத்தில் கயிருனது பாம்பாகக் காட்சி யளிப்பது போல, ஈஸ்வரன் உலகமாகக் காட்சியளிக்கிருன். அவ்வாறு காட்சியளிக்கும் சக்தி ஈஸ்வரனுக்கு இருக்கிறது. அந்தச் சக்திக்கே ‘மாயை’ என்று பெயர்.

ஈஸ்வரனிடத்தில் விளங்கிக் கொண்டிருக்கிற அந்த மாயா சக்தியானது, ஆன்மாக்களில் வியாபித்து, அவற்றின் அறிவொளியை மறைக்கிறது. அப்படி மறைக்கும் நிலையில், அதே மாயா சக்தியானது ‘அவித்தை’ என்று பெயர் பெறுகிறது.

இந்த மாயையும் அவித்தையும் மெய்ப்பொருள்களா பொய்ப்பொருள்களா என்பது அடுத்த கேள்வி.

இந்தக் கேள்விக்கு விடை காண வேண்டுமானுல், உலகம் மெய்ப்பொருளா என்பதை நாம் முதலில் புரிந்துகொள்ள வேண்டும்.

கயிற்றரவு என்ற சொல்லிலே, கயிறு, அரவு என்னும் இரு பொருள்களின் பெயர்கள் இடம் பெற்று உள்ளன.

ஆனல், உண்மையிலே அங்கு இரண்டு பொருள்களா இருக்கின்றன ?

கயிறு என்ற ஒரு பொருள்தானே இருக்கிறது. அரவு (அதாவது பாம்பு) என்பது வெறும் பொய்த் தோற்றம்.

இதே போல,

ஈஸ்வரன் என்ற ஒரு பொருள்தான் இருக்கிறது. அதுவே மெய்ப்பொருள். உலகம் என்பதுவெறும் பொய்த்தோற்றம்.

கயிற்றரவிலே, கயிருகிய மெய்ப்பொருளுக்கு 'அதிஷ்டானம்' என்று பெயர். பாம்பாகிய பொய்த் தோற்றத்துக்கு 'அத்தியாசம்' என்று பெயர்.

அத்தியாசத்துக்கு 'மித்தை' என்ற இன்னெரு பெயரும் உண்டு.

ஆனல், 'மித்தை அல்லது அத்தியாசம் எனப்படுகிற பொய்த் தோற்றம் வேறு. பொய்ப்பொருள் எனப்படுவது வேறு.

குதிரைக்கொம்பு, ஆகாயத் தாமரை, மலடியின் மகன் ஆகிய இவையெல்லாம் பொய்ப் பொருள்கள். அதாவது, சொல்லளவில் அல்லாமல், பொருளவில் இவை இல்லவே இல்லை. அதனல் இவற்றை 'இல்பொருள்கள்' என்கிருேம்.

கயிற்றரவு அத்தகைய இல்பொருள் அல்ல. ஏனென்ருல், அது நம் கண்ணுக்கும் தெரிகிறது. அதே சமயத்தில், அது ஓர் உள்பொருளும் அல்ல. வெறும் தோற்றமாக மட்டுமே காட்சி அளிக்கிற பொருள்.

கயிறு என்ற உள்பொருள், அதற்கு அந்த தோற்றத்தைக் கொடுக்கிறது. குதிரைக் கொம்புக்கோ, ஆகாயத் தாமரைக்கோ, மலடி மகனுக்கோ அத்தகைய ஒரு தோற்றத்தைக் கொடுப்பதற்கான உள்பொருள் எதுவும் கிடையாது. தோற்றத்தைக் கொடுப்பதற்கான உள்பொருள் எதையுமே பெற்றிராமையால், அவற்றிற்குத் தோற்றமும் கிடையாது.

உலகத்துக்குத் தோற்றம் இருக்கிறது. தோற்றம் இருப்பதால், அது குதிரைக் கொம்பைப் போலவோ அல்லது மலடி மகனைப் போலவோ ஓர் இல்பொருள் அல்ல. உலகத்துக்குத் தோற்றத்தைக் கொடுக்கிற உள்பொருள் ஈஸ்வரன்.

அதாவது,

உலகத்துக்கு ஈஸ்வரன் அதிஷ்டானம். ஈஸ்வரனிடத்திலே உலகம் அத்தியாசம், அல்லது மித்தை!

மித்தை வேறு—இல்பொருள் வேறு என்பதை இந்த இடத்தில் மீண்டும் ஒருமுறை நாம் நன்றாக நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். மித்தைக்கு அதிஷ்டானம் உண்டு. இல்பொருளுக்கு அதிஷ்டானம் கிடையாது. இதுதான் இரண்டுக்கும் இடையே உள்ள சாரமான வேறுபாடு.

## சீவன் முக்தனின் இரட்டை வாழ்வு

உலகம் ஓர் இல்பொருள் அல்ல—ஆனால் அது ஒரு மித்தையான பொருள் என்பது சங்கரரின் கொள்கை. அந்த மித்தைக்கு அதிஷ்டானப் பொருள் ஈஸ்வரன்.

எனவே,

உலகம் என்பது ஈஸ்வரனைப் போல் ஓர் உள் பொருளும் அல்ல, மலடியின் மகனைப் போல ஓர் இல்பொருளும் அல்ல என்னும் இயல்பை உடைய ஒரு பொருளுக்கு அநிர்வசனீயம் என்று பெயர். அநிர்வசனீயம் என்றால், இத்தன்மையது என்பதாக வரையறுத்துக் கூற முடியாதது என்று பொருள்.

மித்தை என்பதும், அநிர்வசனீயம் என்பதும் ஓர் அர்த்தத்தை உடைய சொற்கள் ஆகும்.

உலகம் அநிர்வசனீயமாய் இருப்பதால், அந்த உலகத் தோற்றத்துக்குக் காரணமாய் ஈஸ்வரனிடத்தே விளங்கிக் கொண்டிருக்கிற மாயாசக்தியும் அநிர்வசனீயமே என்கிறார் ஆதிசங்கரர். இந்த இடத்தில்தான், சங்கரரோடு மற்றப் பெரும்பாலான சமயாச்சாரியார்கள் வேறுபடுகிறார்கள்.

அந்த வேறுபாடுகளையெல்லாம் விளக்குவது என்றால், இதைப்போல் பல பக்கங்கள் எழுதவேண்டியது ஆகிவிடும். ஆகையால், அவற்றைப் பற்றி நாம் இங்கே ஆராயப் போவதில்லை. நாம் எடுத்துக்கொண்ட பொருளுக்கு, அம்மாதிரி ஆராய்ச்சியும் அவசியம் இல்லை.

ஈஸ்வர சக்தியாகிய மாயை அநிர்வசனீயம் என்னும் போது, ஆன்மாக்களைப் பீடித்துள்ள அவித்தையும் அநிர்வசனீயமே என்பதைச் சொல்லவேண்டுவதில்லை.

இதுவரையில் உலகம் மெய்ப் பொருள் என்று எண்ணிக் கொண்டிருந்த சீடன்,இப்போது, குருவினுடைய உபதேசத்தாலும், ஈஸ்வரனுடைய திருவருளாலும், அது ஓர் அநிர்வசனீயப் பொருள் என்பதை உணரத் தொடங்குகிறான். அந்த உணர்வு வந்த நிலையில் அவன் நடந்து கொள்ளவேண்டிய முறை எது?

உலகம் உள் பொருளாய் இருந்தால் அவன் உலகியலில் ஆற்ற வேண்டிய கடமைகளை ஆற்றியே தீரவேண்டும். கடைப்பிடிக்க வேண்டிய அறநெறிகளைக் கடைப்பிடித்தே தீரவேண்டும்.

உலகம் இல்பொருளாய் இருந்தால், அதில் ஆற்ற வேண்டிய கடமைகளோ, கடைப்பிடிக்க வேண்டிய அற நெறிகளோ அவனுக்கு அறவே இல்லாமல் போய்விடுகின்றன.

ஆனால்,

உள்பொருளோ, இல்பொருளோ அல்லாத ஓர் அநிர் வசனீயம் பொருளாக உலகம் ஆகிவிடும்போது, அவனுக்கென்று ஏதாவது கடமைகள் உண்டா, இல்லையா? அவன் கடைப்பிடிக்க வேண்டியஅறநெறிகள் எவையாவது உளவா, இலவா என்னும் கேள்வி எழுகிறது.

உலகம் அநிர்வசனீயம் என்ற உணர்வைப் பெற்றவன், உண்மையில் ஓர் இரட்டை வாழ்வு வாழ்பவன் என்றே சொல்லவேண்டும்.

அதாவது,

உலகம் ஓர் இல்பொருள் அல்லவாகையால் அவன் தன்னை எந்த ஓர் அறநெறிக்கோ கடமைக்கோ கட்டுப்பட்டவனாகக் கருதிக்கொள்ள வேண்டியதில்லை. அதே சமயத்தில் உலகம் ஓர் இல்பொருளும் அல்லவாகையால் அந்த உலக வாழ்வுக்கு உரிய கடமைகளோ, அறநெறிகளோ தனக்கு இல்லை என்பதாக அவன் சும்மாஇருந்துவிடவும் முடியாது.

பின்னே அவன் என்னதான் செய்யவேண்டும் என்கிறீர்கள்?

தாமரைஇலையில் தண்ணீர்த்துளி எப்படி இருக்கிறதோ, அதே மாதிரி, அவன் இந்த உலக வாழ்வில் இருக்க வேண்டும் என்கிறார் ஆதிசங்கரர்.

தண்ணீர்த் துளியானது தாமரை இலையின் மேலேயே தங்கி இருந்தாலும் அது அந்த இலையிலே ஒட்டுவதில்லை. அதேபோல் உலகிலே வாழ்ந்தாலும் மனிதன் உலகியலில் ஒட்டாமல் வாழக் கற்றுக்கொள்ள வேண்டும் என்பது அவர் கருத்து.

அது எப்படி?

வெளிப்பார்வைக்கு அவன் தன்னுடைய தகுதிகளுக்கும் சூழ்நிலைக்கும் உரிய கடமைகளையெல்லாம் தவறாமல் செய்ய வேண்டும். அறநெறிகளையெல்லாம் தவறாமல் கடைப்பிடிக்க வேண்டும். ஆனால் உள்ளூற 'இந்தக் கடமைகளும் அறநெறிகளும் எனக்கு உண்மையிலேயே உரியவை அல்ல. ஒரு நடிகன் நாடக மேடையில் தனக்கு உரிய வேடத்தை நடித்துக் கொண்டு இருப்பது போல, நானும் உலகியல் என்னும் இந்த நாடகத்தில் பல கடமைகளுக்கும் அறநெறிகளுக்கும் கட்டுப்பட்டவன் போல் நடித்துக் கொண்டிருக்கிறேன், என்னும் உணர்வோடு அவன் வாழ வேண்டும்.

## வியாவகாரிக சத்தியம்

பெரிய கோடீஸ்வரனான ஒரு நட்சத்திர நடிகர், சினிமாவில் பிச்சைக்கார வேடம் போடுகிறார் என்று வைத்துக்

கொள்வோம். அதற்காக அவர் உண்மையிலேயே பிச்சைக் காரர் ஆகிவிடுவாரா?

அல்லது,

அடுத்த வேளைச் சாப்பாட்டுக்கே வழி இல்லாத ஓர் ஏழை நடிகர், அரசகுமாரனாக வேடம் போடுகிறார் என்று வைத்துக் கொள்வோம். அதற்காக அவர் உண்மையிலேயே அரசகுமாரனாக ஆகிவிடுவாரா?

கோடீஸ்வர நடிகர் ஒரு பிச்சைக்காரனாக நடிக்கும் போது, தான் ஒரு கோடீஸ்வரன் என்பதை மறந்து விடுவ தில்லை. ஆனால் அதற்காகப் பிச்சைக்கார வேடத்திற்கு உரிய நடை உடை பாவனைகளைக் கடைப்பிடிப்பதில் அவர் அணுவளவும் தவறு இழைப்பதில்லை.

ஏழை நடிகர் ஓர் இளவரசனாக நடிக்கும்போது, தான் ஓர் ஏழை என்பதை மறந்து விடுவதில்லை. ஆனால் அதற்காக, இளவரச வேடத்திற்கு உரிய நடை உடைகளை இம்மியளவும் நழுவ விடுவதில்லை.

இதே போல,

உலகம் அநிர்வசனீயம் என்ற உணர்வைப் பெற்ற சீடனும், இந்த உலகியலில் வாழும் போது, தான் ஆத்மஸ்வ ரூபன் என்பதையும் அந்த ஆத்மா வேறு—இறைவன் வேறு அல்ல என்பதையும் அரைக்கணமும் மறந்துவிடக் கூடாது. ஆனால் அதே சமயத்தில், தான் தாங்கியுள்ள மானிட வேடத் திற்குள்ள கடமைகளையும் அறநெறிகளையும் அவன் தவறாமல் கடைப்பிடிக்க வேண்டும்.

பிச்சைக்காரனாக நடிப்பவன் தன் பாத்திரத்துக்கு ஏற்ற படி எல்லாரிடமும் கெஞ்சிக் கதறிக் கண்ணீர் விட்டால் தான், அவன் ஓர் உயர்ந்த நடிகன் என்று போற்றப்படுவான். இளவரசனாக நடிப்பவன் தன் பாத்திரத்துக்கு ஏற்றபடி எல்லாரிடமும் பெருமிதத்தோடு பேசி பெருந்தன்மையோடு

நடந்து கொண்டால்தான், அவன் ஒரு சிறந்த நடிகன் என்று புகழப்படுவான்.

அப்படி இல்லாமல் பிச்சைக்கார வேடம் போட்டவன் 'நான் உண்மையில் ஒரு கோடீஸ்வரன். அப்படியிருக்க நான் இந்த நாடக மேடையில் ஏன் கெஞ்சிக் கதறிக் கண்ணீர் விடவேண்டும்'? என்று எண்ணுவானுனல் அவன் எல்லாராலும் இகழப்படுவானே அன்றிப் புகழப்படமாட்டான்.

இதே போல்,

ஒரு சீடன், தன்னுடைய உபாசனையின் வலிமையால் மனத்தை அசைவற்றிருக்கச் செய்து, ஆத்மஸ்வரூபத்தை அனுபவ வாயிலாக அறிந்தவனே யானுலும்,

அவன் அந்த அசைவற்ற தியான நிலையை விட்டு எழுந்து உலக விவகாரங்களில் ஈடுபடத்தொடங்கிவிட்டால்,

அப்போது அவன் தன்னுடைய பிறப்புக்கும் சூழ்நிலைக்கும் உரிய கடமைகள் அனைத்தையும் தவருமல் கடைப்பிடிக்க வேண்டும். தன் குடும்பத்துக்கும் சமூகத்துக்கும் பதவிக்கும் உரிய அறநெறிகளிலிருந்து சிறிதும் வழுவாது நடக்க வேண்டும்.

ஆனுல், அதே சமயத்தில், 'நான் உண்மையில் ஆத்மஸ்வரூபன். ஆத்மாவுக்கு எந்த ஒரு கடமையும் கிடையாது. தர்மமும் கிடையாது. இருந்தாலும் நாடக மேடையில் நடிக்கும் ஒரு நடிகனைப் போல, நான் கடமைகளைச் செய்து வருகிறேன். தர்மங்களைக் கடைப்பிடித்து வருகிறேன்' என்ற உள்ளுணர்வில் அவன் ஊன்றி நிற்க வேண்டும்.

நடிகன் எதற்காக நடிக்கிருன்? இரசிகர்களைத் திருப்திப் படுத்துவதற்காக. அவ்விதமே, உலகம் அநிர்வசனீயம் என்ற உணர்வினைப் பெற்ற சீடனும் தன்னைச் சூழ்ந்திருக்கும் உலக

மக்களைத் திருப்தி செய்யும் வகையில் தன் வாழ்க்கை முறையை அமைத்துக்கொள்ள வேண்டும்.

'இந்த உலக மக்களை நான் ஏன் திருப்திப்படுத்த வேண்டும்? அவர்களால் எனக்கு ஆக வேண்டியது என்ன இருக்கிறது?' என்று அவன் எண்ணக்கூடாது. ஏனென்றால், ஆத்மாவை அனுபவசாலியாக அறிந்தவன் என்ற முறையில் அவன் மற்ற உலக மக்களைக் காட்டிலும் உயர்வு படைத்த வன். அந்த உலக மக்களுக்கு அவன் ஒரு வழிகாட்டியாக விளங்க வேண்டியவன். ஆகையால், அவர்களைத் தத்தம் அறநெறிகளில் நிற்கச் செய்வதற்காகவாவது அவன் தனக்கு உரிய அறநெறியில் நின்று காட்டவேண்டும்.

சுருக்கமாகச் சொன்னால்,

சமுதாயத்துக்கே ஓர் எடுத்துக்காட்டாக வாழ்ந்து காட்ட வேண்டிய கடமை, ஜீவன் முக்தனுக்கு இருக்கிறது. உலக விவகாரங்களில் ஈடுபட்டிருக்கின்ற வரையில் அவன் அந்தக் கடமையிலிருந்து நழுவக்கூடாது. அந்தச் சமயத்தில் ,உலகம் தான் ஓர் உள்பொருள் அல்லவே? அந்த உலக வாழ்வில் நாம் எப்படி நடந்து கொண்டால் என்ன?' என்று அவன் அலட்சியமாக எண்ணக் கூடாது. உலகம் ஓர் உள் பொருளாய் இருந்தால் அதில் அவன் எப்படி நடந்து கொள் வானோ, அப்படியே அப்போது அவன் வெளிப்பார்வைக்கு நடந்து கொள்ள வேண்டும்.

இந்த விதியை வலியுறுத்துவதற்காகவே 'ஒருவன் ஜீவன் முத்தனாய் இருந்தாலும், அவன் உலக விவகாரங்களில் ஈடுபட்டிருக்கும் நேரத்தில் அவனுக்கு அந்த உலகம் ஓர் உள் பொருளே' என்கிறார் ஆதிசங்கரர்.

உள்பொருள் என்பதனை, வடமொழியில் சத்தியம் என்று சொல்லுவார்கள். கனவுக் காலத்தில் அந்தக் கனவுலகம் சத்தியமாகக் காணப்படுவது போல, விவகாரத்தில் இந்த நனவுலகம் சத்தியமாகக் காணப்படுவதால் இவ்வுலகம் ஒரு வியாவகாரிக சத்தியம் என்பது ஆதிசங்கரர் கருத்து.

## பாரமார்த்திக சத்தியம்

ஆனுல்,

இதுவே அவருடைய முடிவான சித்தாந்தம் என்று எண்ணிவிடக் கூடாது.

சத்தியத்தில் இரண்டு வகைகள் உள. ஒன்று, வியாவ காரிக சத்தியம். மற்ருென்று, பாரமார்த்திக சத்தியம். இந்த இரண்டுக்கும் உள்ள வேறுபாடு என்ன என்பதை நாம் சற்று ஆராய வேண்டும்.

கயிற்றரவு என்னும் காட்சியிலே, கயிறு அதிஷ்டானப் பொருள் என்றும் அரவு அத்தியாசப் பொருள் என்றும் நாம் கண்டோம். அல்லவா? இந்த இரண்டு பொருள்களுள் கயிறு, பாரமார்த்திக சத்தியம். அரவு, வியாவகாரிகசத்தியம். அதாவது, அதிஷ்டானப் பொருள், பாரமார்த்திக சத்தியம். அத்தியாசப் பொருள், வியாவகாரிக சத்தியம்.

இதே போல்,

இந்த உலகத்துக்கு அதிஷ்டானப் பொருளாகிய ஈஸ்வரன், பாரமார்த்திகசத்தியம். அவனிடத்தே அத்தியாச மாகத் தோற்றம் அளிக்கிற உலகம், வியாவகாரிக சத்தியம்.

கயிறு, பாம்பாக காட்சி அளிக்கும்போது, இதுபாம்பு என்று அதற்கு நாம் கொடுக்கின்ற பெயர்தான் தவருனதே தவிர பாம்பாகக் காட்சி அளிக்கிறமூலப்பொருள் (அதாவது கயிறு) பொய்யானது அல்ல.

ஒரு மோதிரத்தை அழித்துத் தோடாகச் செய்கிருேம் அப்போது, மோதிரம் என்றவடிவந்தான் மாறுகிறதே தவிர மூலப்பொருளாகிய தங்கம் வேறு ஓர் உலோகமாக மாறி விடுவதில்லை.

கயிறு என்ற மூலப்பொருளின் பெயர், பாம்பு என்று மாறுதல் அடைந்தது. அது ஒருவனுக்குப் பயத்தைஉண்டு பண்ணியது,

தங்கம் போன்ற மூலப் பொருளின் பெயரும் வடிவமும் தோடு என மாறுதல் அடைந்தன. அவை ஒரு பெண்ணுக்கு மகிழ்ச்சியை உண்டு பண்ணின.

கயிறு என்ற மூலப் பொருள் எவருக்கும் பயத்தை உண்டு பண்ணுது. தங்கம் என்ற மூலப்பொருள் மோதிர வடிவத்திலே அந்த பெண்ணின் கையிலிருந்தும் அது அவளுக்கு மகிழ்ச்சியை உண்டு பண்ணவில்லே. அதனுல் தான் அவள் அதைத் தோடாக மாற்றினுள்.

இதே போல,

நாம் அடைகிற பயமோ மகிழ்ச்சியோ, இன்னும் இவைபோன்ற பிற உணர்ச்சிகளோ இந்த உலகத்துக்கே மூலப்பொருளாய் விளங்குகிற ஈஸ்வரனிடத்திலிருந்து நமக்கு உண்டாவதில்லே. கயிற்றிலே அரவை போலவும், தங்கத்திலே தோடு, மோதிரம் போன்ற நகைகளேப் போலவும் அத்தியாசமாய்க்காட்சி அளிக்கிற உலகியல் பொருள்களின் பெயர்களும் வடிவங்களுமே நம் உள்ளத்தில் பல வகையான உணர்ச்சிகளேத் தோற்றுவிக்கின்றன.

பெயர்களேயும் வடிவங்களேயும் வடமொழியில் நாம ரூபங்கள் என்று சொல்லுவார்கள். ஆகையால், இந்த உலகத்துக்கே நாமரூபப்பிரபஞ்சம் என்று ஒரு பெயர் வழங்கப்படுகிறது.

எனவே,

உள்ளத்தில் நமக்கு இன்ப உணர்ச்சிகளேயோ துன்ப உணர்ச்சிகளேயோ தோற்றுவிப்பவை நாமரூபங்களே அன்றி, அவற்றிற்கு அதிஷ்டானமாகிய ஈஸ்வரன் அல்லன் என்று தெரிகிறது அல்லவா?

இவ்வாறு,

உள்ளத்திலே இன்பதுன்ப உணர்ச்சிகளால் ஒருவன் தாக்கப்படும் வரையில், அவன் எவ்வளவுதான், ஆத்ம

ஞானம் வரபெற்றவனாய் இருந்தாலும் அவன் உலகம் என்ற வியாவகாரிக சத்தியத்தில் வாழ்பவனே தவிர, பார மார்த்திக சத்தியத்தில் வாழ்பவன் அல்லன்.

வியாவகாரிக சத்தியத்தில் வாழும் ஒருவன், தியான காலத்தில் தன்னுடைய ஆத்மாவை அனுபவ வாயிலாக அறிகிறவனேயானாலும், தியானம் கலைந்து எழுந்து உலகியல் விவகாரங்களில் ஈடுபடும் போது, உள்ளத்திலே நாமரூப உணர்வுகளால் தோற்றுவிக்கப்படுகிற இன்ப துன்பங்களுக்கு ஆளாகியே தீருவான். அப்படி அவன் ஆளாகிக் கொண்டு இருக்கும் வரையில், மற்ற மனிதர்களைப் போல அவனும் தன்னுடைய வாழ்க்கை நிலைக்கு உரிய கடமைகளையும் நெறிகளையும் தவறாமல் கடைப்பிடித்தே ஒழுகவேண்டும்.

ஆனால்,

'ஆத்மாவுக்கு இன்பமும் கிடையாது. துன்பமும் கிடை யாது. அது இந்த இரண்டுக்கும் அப்பாற்பட்ட சாந்தி வடிவமானது. நமக்குத் தியான காலத்தில்தான் சாந்தி இருக்கிறதே தவிர, தியானம் கலைந்து எழுந்தவுடன் அந்தச் சாந்தியும் கலைந்துவிடுகிறது. அப்படி இல்லாமல் நாம் எப்போதுமே நிரந்தரமான சாந்தியோடு வாழ்ந்து கொண் டிருக்க வேண்டும்' என்று அவனுக்கு உண்மையிலேயே ஓர் ஆர்வம் ஏற்படுமானால், அதற்காக அவன் சில சாதனைகளை மேற்கொள்ள வேண்டும்.

## மனோ மௌனம்

எப்படியென்றால்,

இன்ப உணர்ச்சியாய் இருக்கட்டும், துன்ப உணர்ச்சி யாய் இருக்கட்டும், நம் உள்ளத்தில் எழுகிற எல்லா உணர்ச்சிகளுக்குமே, நமது எண்ணங்கள்தாம் காரணமாய் இருக்கின்றன.

ஆழ்ந்த உறக்கத்தில் நம் மனத்திலே எந்த ஓர் எண்ண மூமே ஏற்படுவதில்லை. அதனுல், அப்போது நம் உள்ளத்தில் எந்த ஓர் உணர்ச்சியும் பொங்கி எழுவதில்லை.

ஆகையால்,

நாம் உணர்ச்சிகளுக்கு ஆளாகாமல் இருக்க வேண்டு மாஞல், நம் மனத்திலே எந்த ஓர் எண்ணமுமே எழாதபடி காத்துக்கொள்வதற்கு நாம் கற்றுக்கொள்ள வேண்டும்.

ஆனுல்,

அது ஒரேயொரு நாளில் கைகூடிவிடக்கூடிய ஒரு காரியம் அல்ல. நெடுநாள் பயிற்சியின் பின்னரே அது சிறிது சிறிதாகச் சித்திக்கத் தொடங்கும்.
அந்தப் பயிற்சியிலும் பல படிகள் இருக்கின்றன. அதில் முதலாவது படி, நாம் கூடுமானவரையில் நமது பேச்சுக் களை குறைத்துக் கொள்வதே ஆகும்.

பேசித்தான் ஆகவேண்டும் என்ற அவசியம் ஏற்பட்டா லொழிய, நாம் எப்போதும் பேசாமலே இருக்க வேண்டும். அப்படிப் பேச நேருமானுல், இயன்றவரையில் மிகவும் குறைந்த சொற்களையே பேசவேண்டும்.

பொதுவாக,

எந்த ஒரு விஷயத்தைப்பற்றியும் நாம் ஒவ்வொருவரும் நமக்கென்று சில குறிப்பிட்ட கருத்துக்களைக் கொண்டவர் களாய் இருக்கிறேம். அந்தக் கருத்துக்களைப் பிறரிடம் எடுத்துக் கூறுவதில் நாம் ஆர்வம் உடையவர்களாய் இருக் கிறேம் .அந்த ஆர்வம்தான் நம்மை அதிகமாகப் பேச வைக்கிறது.

ஆகவே,

நாம் பேசாமல் இருக்கப் பழக வேண்டுமானுல், எந்த விஷயத்தைப் பற்றியும் நமக்கென்று ஒரு தனிப்பட்ட

அபிப்பிராயத்தை நம் மனத்தில் உருவாக்கிக் கொள்ளாமல் இருப்பதற்கு நாம் பழக வேண்டும். அப்படி ஓர் அபிப்பிராயம் நம் மனத்தில் நம்மையும் அறியாமல் உருவாகத் தொடங்கும்போது, 'மனமே, நீ பேசாமல் இரு' என்று அதை நாம் அடக்கி நிறுத்திவிட வேண்டும்.

மனத்தில் ஏதாவது ஒரு கருத்து எழும்போதெல்லாம் அதை நாம் இப்படியே அடக்கி அடக்கித் தடுத்து நிறுத்தி வந்தால், நாளடைவில் அந்த மனமானது தானுகவே மௌன நிலையை அடைந்துவிடும். நாம் விரும்பினுல் அல்லாமல் நம்முடைய வாயானது தானுகவே எதையும் பேசாமல் இருப்பதுபோல, நம்முடைய மனமும் நாம் விரும்பினுல் அல்லாமல் தானுகவே எதையும் எண்ணுமல் இருக்கக் கற்றுக்கொண்டுவிடும். அதற்குத்தான் மனே மௌனம் என்று பெயர்.

இப்போது,

நம்முடைய மனத்தில் விநாடிக்குக் கோடி எண்ணங்கள் நாம் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும் தாமாகவே எழுகின்றன. அல்லவா?

மனே மௌனம் அடைந்தவர்களின் உள்ளத்தில் அவை அப்படி எழமாட்டா. 'இதைப்பற்றி நீ சற்றுச் சிந்தனை செய்' என்று அவர்கள் தம் மனத்திற்குக் கட்டளையிட்டால் அன்றி, அந்த மனமானது எப்போதும் யாதொரு எண்ணமும் இன்றி மௌனமாகவே இருந்து கொண்டிருக்கும்!

மனத்தில் எண்ணங்கள் எழாதபோது, உள்ளத்திலும் அவர்களுக்கு இன்ப துன்ப உணர்ச்சிகள் எழப்போவதில்லை. அல்லவா?

அப்போதுதான், இன்பங்களையும் துன்பங்களையும் கடந்த சாந்தி என்னும் உயரிய நிலையை அவர்கள் அடைந்தவர்கள் ஆகிருர்கள்.

## ஆத்மப்ரம் மைக்யம்

உணர்ச்சிகளைக் கடந்தவன், இந்த உலகத்தையே கடந்தவன் ஆகிவிடுகிறான். அத்தகையோரைத்தாம் கடந்த ஞானிகள் என்று கூறுவார்கள்.

நமக்கு உள்ளிருக்கும் ஈஸ்வரனை நம்மால் உணரவொட்டாதபடி மறைத்துக் கொண்டிருப்பவை, நமது எண்ணங்களும் உணர்ச்சிகளுமே தவிர வேறல்ல. அந்த எண்ணங்களும் உணர்ச்சிகளும் அறவே அடங்கிவிட்ட மனோ மௌன நிலையில், அந்த ஈஸ்வரன் எந்த ஒரு மறைப்பும் இன்றி, நமக்குள் தானாகவே வெளிப்பட்டு விளங்கத் தொடங்குகிறான். ஈஸ்வரன் அப்படி எவரிடத்தில் நிரந்தரமாக விளங்கிக் கொண்டிருக்கிறானோ, அவரே பாரமார்த்திக சத்தியத்தில் வாழ்வு உடையவர் ஆவார். அத்தகைய வாழ்வு உடையவர்களுக்குத்தாம், உலகில் எந்த ஒரு கடமையும் கிடையாது. அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய அறநெறிகளும் இலவாகிவிடுகின்றன!

இது மட்டும் அல்ல,

உலகத்தைப் பற்றிய எண்ணங்களே இல்லாத ஞானிக்கு அந்த உலகமே ஓர் இல்பொருள் ஆகிவிடுகிறது. அவனுக்குத் தன் உடலைப்பற்றிய எண்ணங்களும் இருக்கமாட்டா. அந்த நிலையில் பிறர் கண்களுக்குத்தான் அவன் ஓர் உடலோடு கூடியவனாகக் காட்சியளிப்பானே அன்றி, தன்னுடைய உள்ளுணர்வில் அவன் தனக்கென ஓர் உடல் இல்லாதவனாகவே விளங்கிக் கொண்டிருப்பான்!

உடலும் இல்லை, உலகமும் இல்லை என்னும்போது இந்த இரண்டையும் படைத்த ஈஸ்வரனைப் பற்றிய உணர்வும் அவனுக்கு இல்லாமல் போய்விடுகிறது. அந்த ஈஸ்வரனை அவன் தனக்கு வேறாக உணர்வதில்லை. தானாகவே, அதாவது தன்னுடைய ஆத்மாவாகவே அவன் உணருகிறான்.

ஆத்மா தன்னுடைய குணத் தொகுதியோடு தாதாத்மியப்பட்டிருக்கும் போது, அதற்கு ஜீவன் என்று பெயர். அந்தத் தாதாத்மியத்தில் இருந்து விடுபட்ட நிலையில் தான் அத்துவைத சாஸ்திரங்களில் அதனை ஆத்மா என்ற பெயரால் குறிப்பிடுவார்கள்.

இதே போல்,

உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூத்தொழில்களையும் செய்து கொண்டிருக்கும் போதுதான் இறைவனுக்கு ஈஸ்வரன் என்ற பெயர் வழங்கப்படும். உலக உணர்வைக் கடந்த பாரமார்த்திக வாழ்வினைப் பெற்றுவிட்ட ஞானிகளைப் பொறுத்தமட்டில், இறைவன் அந்த முத்தொழில்களையும் இழந்து விட்டவன் ஆகிறான். அப்படி இழந்து விட்ட நிலையில், அவனுக்கு ஈஸ்வரன் என்று பெயர் கிடையாது. பிரும்மம் என்று பெயர்.

ஆத்மாவுக்கு ஜீவத்துவம் என்பது ஒரு களங்கம். அந்தக் களங்கத்தை உபாதி என்ற சொல்லால் குறிப்பிடுவார்கள். பிரம்மத்துக்கு ஈஸ்வரத்துவம் ஓர் உபாதி.

ஒரு ஞானியினுடைய ஆத்மா, ஜீவத்துவம் என்னும் உபாதியில் இருந்து விடுபடும்போது, அவனைப் பொறுத்தமட்டில் பிரும்மமும் தன்னுடைய ஈஸ்வரத்துவம் என்னும் உபாதியிலிருந்து விடுபட்டு நிற்கும். அவ்வாறு இரண்டு உபாதிகளும் சுழன்றுவிட்ட நிலையில், அங்கே ஆத்மா, பிரும்மம் என்ற இரண்டு பொருள்கள் இருக்கமாட்டா. இரண்டும் இரண்டறக் கலந்து, ஒரே பொருளாய் ஆகிவிடும். அதுவே, ஆத்ம ப்ரம்ம ஐக்கியம் என்று சொல்லப்படுவது.

அந்த ஒப்பற்ற உயரிய நிலையை எய்தியவனுக்கு உலகம் ஒரு மித்தைப் பொருளாகவோ அல்லது அநிர்வசனியப் பொருளாகவோ தெரிய மாட்டாது. அது ஒரு பொய்ப் பொருளாகவே தெரியும். உறுதியாகத் தெரியும்.

கயிற்றிலே பாம்பைக் கண்டவன் விளக்கு வெளிச்சம் வந்தவுடன் பாம்பைக் காணவில்லை, கயிற்றைத்தான் காண்கிறான். அப்படியானால், 'வெளிச்சம்' வரும் வரையில், அந்தப் பாம்பு, கயிற்றிலே தான் இருந்தது. வெளிச்சம் வந்தவுடன் அது எங்கேயோ போய் விட்டது' என்று சொல்லலாமா?

பாம்பு என்ற பொருள் இல்லவே இல்லை— அது கயிற்றிலே ஒருபோதும் இருந்ததில்லை என்பது தானே, அவன் உணரப்படுகிற உண்மை!

இதே போல்,

பாரமார்த்திக வாழ்வினைப் பெற்ற ஞானிகளும், 'இந்த உலகம் என்ற பொருள் ஒருபோதும் இருந்ததில்லை' என்னும் உணர்வறிந்த பேருண்மையை உள்ளங்கை நெல்லிக்கனி போல் உணரப் பெறுவார்கள்.

உலகம் என்ற பொருளே ஒருபோதும் இருந்ததில்லை என்னும் போது, அந்த உலகத்தோற்றத்துக்குக் காரணமாய் இருந்த மாயை என்ற பொருளும் இல்லாததாய் விடுகிறது. அந்த மாயையின் வேறொரு வடிவாகிய அவித்தையும் இல்லாததாகி விடுகிறது. அந்த அவித்தையின் விளைவாக ஏற்பட்ட பந்தம், அவித்தையைப் போக்கிய குரு, குருவின் உபதேசத்தால் அடையப்பட்ட முத்தி, இவை யாவுமே பொய்ப்பொருள்களாகி விடுகின்றன.

இப்படிப்பட்டவர்களே பராவர ஞானிகள் எனப்படுவர். இவர்கள் பிரும்மமாகவே ஆகிவிட்டவர்கள். அந்த நிலையில், 'நான் பிரும்மம்' என்ற இரு பொருளுணர்வு கூட அவர்களுக்கு இருக்கமாட்டாது. 'நான்' என்ற பொருள் உணர்வு தான் அவர்களுக்கு இருக்கும். அண்மையிலே அத்தகைய ஒரு பொருளுணர்வோடு வாழ்ந்திருந்தவர், பகவான் ஸ்ரீ இரமண மகரிஷிகள் ஆவர்.

இதுதான் ஸ்ரீ ஆதிசங்கரரின் பாதை. மனிதன் கடவுள் நிலையை அடைவதற்கு இதைக் காட்டிலும் சிறந்த பாதை வேறு கிடையாது என்பது பல மகான்களுடைய முடிவு.

வாழ்க சங்கரர்!

வாழ்க அத்வைதம்!

முற்றியது